இனைய வாற்றியு மகவுதித் திடாமைகண் டிரங்கி
யனைய நீடவை யிருவிடு மவனுயிர் போல்வார்
புனையு முத்தமிழ் முனிவரன் பொன்னடி வணங்கிற்
றனைய னீவனின் றேல்வழி சாற்றுவ னென்றார். (௭)

சந்த வெண்குடைச் சுகீர்த்தியுந் தருவதா மிஃதென்
றந்த மாதவ னெங்குளா னெனவினி தாய்ந்து
கந்த நெய்தலொண் மகளிர்கண் காட்டுவென் காட்டில்
வந்தம் மாதவ முனிவரன் மலர்ப்பதம் பணிந்தான். (௮)

மிக்க தென்வரைச் சிகாமணி யாகிய மேலோன்
றக்க வாசிக ளொடுபல முகமனுஞ் சாற்றி
மக்கண் மற்றுளா நிகழ்ச்சியும் வினவலும் வளவன்
விக்கு ளென்ன நின்றனன் விழுமமீ தூர. (௯)

என்ன கத்திடைத் துயருனக் கென்றனன் முனிவன்
மன்னன் றானக் களவிலா வளங்கணமற் றளிதந்
தன்ன வற்றினிற பெருமகிழ் வெய்தின னவற்றோ
டின்ன லுற்றனன் புதல்வர்க ளீந்திடா மையினால். (௰)

உலகில் புண்ணிய தீர்த்தங்க ளாடினே னாடி
யலகி லந்தணர்க் கிசைவுறு தானமு மளித்தே
னலகி லோன்புக ளாற்றினேன் றவம்பல விழைத்தே
னலகில் சாந்திகள் செய்தன னுங்கும தருளால். (௰௧)

சிந்தி டப்பெறுந் தளகையோன் செல்வமு மதவே
ளந்த மும்விதி மகிமையு மனந்தநீ டறிவு
மிந்தி ரன்பெறு போகமு மெய்திவாழ்ந் திடினு
மைந்த ரின்றெனின் மற்றதோர் வாழ்வெனப் படுமோ. (௰௨)

கருணை யுற்றினி யேனுமோர் காதல னுதவி
யிருமை தன்னினு மெளியனே னின்பமுற் றிடநீர்
புரிய வேண்டுமென் றுரைத்தனன் பொதியவெற் புறைவோ
னொருவ னோவுமை யிடத்தினோ னருண்மென விளம்பும. (௰௩)

செந்நெ லோங்கெழிற் கன்னலிற் செறிந்திடு மருதந்
துன்னு வேலையிற் சூழ்கமு கிலங்கிடை மருத
மன்னு செஞ்சடைச் சோதிபால் வயங்குமோர் மருத
மன்ன திற்படர் திசைத்திடு மளிக்குல மருதம். (௰௪)

கருமை யுற்றிடுஞ் சிறைவரிக ணமிசைக் குறிஞ்சி
பரவு வானிடைச் செலவுறு பருவரைக் குறிஞ்சி
மருவு தேனசொலார் கூந்தலை மானுநன் குறிஞ்சி
யுரவு தணகடன் முகிற்குல முலவுமாங் குறிஞ்சி. (௰௫)

சொற்றி டாயிடைத் தூயபொன னிழையினு னெய்த
லுற்ற மென்கலை மாதரா ரொளிகொள்கண் ணெய்தல்
பற்று மாடவா தங்கண்மேற் பார்வையி னெய்தல்
கற்ற நாமுல குயிர்கண்மேற் கருணைமுதனெய்தல் (௰௬)

நலங்கொ ளிந்திரன் கலைமக ளுயகல முல்லை
நிலங்கொண் மாதவுன் போற்றுமந் நெடும்பதி முல்லை
வலங்கொள் வேற்றடங் கட்பிறை வாணுதன முல்லை
யிலங்கு மூரலா ரிடைக்குடி யிருந்திடு முல்லை. (௰௭)

எகியங்குநீ விரைவினி லிசைத்திடும் பாலை
போக மென்மொழிக் கூந்தலாள் விளங்கொரு பாலை
பாக்குமூற்றிடு பரமனைப் பணிந்திடப் பாலை
யாகி லுன்மனத துயரொலா மடைந்திடும் பாலை. (௰௮)

முன்பணிக்கதிர் குடிதன் பூசனை முடித்துத்
தென்பு லத்தவர் பூசையாஞ் சிராத்தமு மியற்றி
லின்ப மைந்தனுற் றிடுமென்று னிறைவனே யெவையு
மன்பி னீவனே பிதிர்க்களென் னென்றன னரசன். (௰௯)

## வேறு.

பகரொருகா ரணத்தாற்றுன் மரணமெய்திப்
பசாசபத்த திருந்திடுவோர் நரகினுற்றோ
ரிகலுறுவெம் பசியதனி லுணவிலாம
லீடுருறுங்காற் புவியிடைத்தம வருக்கத் தோர்க்கு
முகவிலையா குகவென்னச் சபித்தல் செய்வார்
மற்றவர்தங் களுக்கிறைவர் பிதிர்க்க ளாகும
புகழவரைப் பூசித்தா லன்னோர் தம்மைப்
பொருபசிதீர்த் திவர்களுக்கும் புதல்வ ரீவர். (௨௰)

இந்தவகை யுதிகார மிவர்கட் கீச
னீந்ததுவே யிவர்பிரேத பிதிர்க்க ளாகும்.
முந்தறஞ்செய் திறந்தசுர ராயி னோர்க்கு
முதல்வர்சில ரவர்தேவ பிதிர்க்க ளாகும்
வந்தமுறை யிவ்விருவ ரிடத்திற் பூசை
வளரிரவி பூசையொடு மதியின் பூசை
சந்திரனம் பிகையிரவி யீச னாகுஞ்
சாற்றிதனாற் பிதிர்பூசை புறம்பன் றுமால் (௨௧)

பரன்பூசை கொள்ளுமிட மநேக மாகும்
பகரவற்றுட் பிதிர்க்களுமோர் தான மாகும்
விரவுமவர் மகவருளிச் செய்த தூனும்
விதுபுனைவோ னருளேயா முறையீ தாகு

மருவுமிக்க வகைப்பூசை புறஞ்செய் தற்கு
மருதவனந் தனில்பற்ற லதிக மாகும்
கருதுபலன் விளைவிற்று மிதற்கோர் காதை
காவலகே ளெனமுனிவ னியம்பு மன்றே. (உஉ)

நத்துலவும் வயன்மருத வனத்தின் மேவு
நம்பனடி தொழப்பகுவர் சேர்ந்து செல்வே
ளித்தனுமாங் கெவ்வரவு நோக்கி முன்னர்
நிறையருளி னொடுநிற்குஞ் செல்வோர்தெல்லா
மித்தகையிற் செல்காலத் தொருநாண் மார்க்கத்
திலங்குபகற் போதிலிரு விசும்பு தன்னி
லத்தவென வய்யவென வையோ வென்ன
வபயமெனக் கதறுமொலி யெழுந்த தம்ம. (உ௩)

அவைசெவியிற் புகலுமென்றே வலக மெல்லா
மல்லலுறு மின்றனென விரக்க மெய்திச்
சிவசிவவென் றனனின்றோர் கணத்தி லெனமுன்
சிவந்தநிறச் சூறையயிர்க் குழிகட் பேழ்வாய்
நவிலுநெடுங் கழுத்தினரா யலகை யென்ன
வெண்ணினர்க ளநேகருட லிரத்தம பாயக்
கவலையுறு நெஞ்சினொடு பாசந் தன்னாற்
சட்டெனடு வெட்டுவொடு கண்ணீர் சோர. (உ௪)

ஓதுபவ னெனத்துதித்தா ரநேகர் பாக
வுறறவரை நோக்கியோ னீவிர் யாவர்
யாதுபவ மிழைத்தீர்க ளென்றே னனைஞர்
யாங்களபிற னில்விழைந்த லெளியோர்க் கின்னல்
வேதநிந்தை தெய்வநிந்தை மிகவோர் நிந்தை
விளம்பிடுமே லவர்பசிக்க வுண்டல் பஞ்ச
பாதகங்க ளழிவழக்கு முதல வாயப்
பாவங்க ளெண்ணிறந்த வியற்றி னோர்கள் (உ௫)

எங்களைவந் துறப்பிடித்திவ் வுருவ நல்கி
யெரிககண்ண ரிதழ்கடிக்கு மெயிற்றி னோர்கள்
பொங்குகடுஞ் சினத்தரிடிக் குரலர் பானுட்
பொருந்துமிருள் வடிவினாக ளியம னேவு
கிங்கரர்க ளெண்ணிறந்தோர் பாசத் தார்த்துக்
கிளைத்திடுமூ விலைச்சூலம் வேல்வா ளாதி
யுங்கநெடும் படைகளினாற் குத்தி வெட்டி
யடித்தல்பு லவறீவிழுத் தேகி னார்கள். (உ௬)

வக்கிரயன் முரவிடுந்தா பயன்பு றங்கு
னெங்கள்சிரந் தனிறகால தனட போதிய
பர்குறநின் றியாங்களுரைத் தனவு நீயும்
பரிவுற்றுதன கனககறிசைத தவறிய சேட்டிய
வேகமுறு நரகினிடை யிவராக டபரை
விழ்த்துமுறைப் பதித்தனட மியற்று கென்றா
ரேகவெழுந் தனர்பின்னு மநேக ரங்கே
யாலமென வீளைந்தனர்கள் கொலைடு சென்றார். (௨௭)

வேறு.

மன்னு மசசக நரகிடை மருவுற விநெதிட்
டன்ன திற்பிறன் மனைவியை யணைததவெம பவததாற்
பன்னு கெர்ரழற் காய்ந்தசெப் பெழிலுறு பாவை
தன்னை பெய்யுறத் தழீஇக்கொடு தளர்ந்திடச் செய்தார். (௨௮)

விருமப லுற்றய லாடனைப் பாரத்ததான் மேவு
பெருமப வத்திறைற் புகலந்த்த் தமத்திடைப் பிறங்கு
மிருமபி னுக்கிய துண்டவெங் காக்கைக ளிகலுற்
றெருங்கு கணகளைக் கொத்தியீர்த் துலைததிட விடுத்தார் (௨௯)

விண்டி டிந்துவு மிரவிபு மேவுநாள பிறர்வீட்
டுண்ட பாதகந் தோங்குதுற் கடத்திடை யுற்று
மனடு காகைகக ளழலிடை வைத்தகூ ரிருப்புத
துணடமிட்டுநா வினை துணித்திட வெதிர் தொடுத்தார். (௩௰)

தந்தை தாயர்கள மூத்தவர் சாற்றிடு மொழியை
மூந்து கேளுரு மதத்திமுன் மூணடவல் வினையின்
வெந்த மற்கொடுஞ் செக்கிலிட் டரைத்திட மெலிந்து
சிந்தை நொந்தறி வழிந்திடச் செய்தனர் பலநாள். (௩௧)

தனையா நந்தைதாய் முதிர்ந்துளோர் சார்ந்திடு கிளைஞ
ரினையா வெமபசி யறிந்திருந் தினிதுறப் புசித்த
வினையி னுற்புகல் செமபினை யுருக்கிவாய் விடுத்துப்
புனைகொள் பாசததி னடித்தனர் பொருந்துறப் பலநாள். (௩௨)

பெரியர் தங்களை நிந்தனை பேசிய வாய்ப்பற
சரிய நீள்கவு ளடியுமென றடித்தனர் சரித்தார்
தெரியு றும்பிறர் பொருள்களைக் கவர்ந்திடு திண்கை
யரியு மெனறரிந் திட்டன ரபயமிட் டலற. (௩௩)

உன்னு மீசர்தம் மடியவ ரெளியவர்க் குதவா
தின்னல் செய்திடு தனுக்களா மிவைகளைப் பிடுங்கித்
தின்னு மென்றுநாய் நரிபுலி கழுகொடு தீயி
பன்ன கங்களை விடுத்தனர் பதைபதைத் திரங்க. (௩௪)

கால சூத்திரங் கண்டகோ லாகலங் கராளே
மால்செய் கூடசான் மலியொடு வளர்கும்பி பாகங்
கோலிடுந் தழற் பிரானரோ தம்படர் கோர
மோலிட்டின்னவை யாதிய நரகெலா முழன்றே. (கூரு)

இலகு மொவ்வொரு நாள்களி னெம்மொ டுமியற்றும்
வலிய தண்டனை தன்னொடு மனமுறு வேகத்
துலக மியாவையுங் கணத்திடை யுலாவியங் குற்றார்
சலவி யேகுதற் கின்றுமத் திறமிவண சூழ்ந்தார். (கூசு)

வேறு.

இன்னமுமென் செய்வர்களோ வறிந்தி லேமே
லிவ்வுழிநீர் சிவசிவவென் றுரைத்த சத்த
மன்னவர்கா தினிற்புகலு மும்மை நோக்கி
யகன்றனர்க ளெமைவிடுத்து நாங்க ளிங்குத்
துன்னினமுற் றுமதருளா லினிமற் றன்னோர்
தொடர்ந்தெம்மை வருத்தாமற் போற்று கென்னப்
பன்னினனி யானவர்களை யஞ்சேன்மி னென்று
பாவு மவருடனு மிடைமருதி னெய்தி. (கூஎ)

முக்கணுறு பரஞ்சுடரை வணங்கச் செய்து
முதியபுகழ்ப் பொன்னியிடை மூழ்கு வித்துத்
தொக்கவர் கோத்திர முரைத்துப் பிதிர்களுக்குத்
தூயதில தர்ப்பணமுஞ் செய்வித் தேன்மே
லக்கணத்தி னலகை யுருவாகி னோர்க
ளமரர்களா யெழின்மருவி விமான மேறி
மிக்கசுர துந்துபிகண் முழங்க வானோர்
வியன்மலர் மாரிகள் சொரியத் துறக்கம்புக்கார் (கூஅ)

அனையதல மான்மியமும் பிதிர்பூசை தன்று
லாகியது முணர்ந்தனையே யனேக ரின்னு
மினையவகை யத்தலத்திற் கதியுற் றோர்க
ளிலங்கிலைவேற் சுகீர்த்தி மன்னநீயு மெய்திக்
கனைகடனஞ் சருந்திறையோன் பதம் பணிந்து
கட்டுரைத்த படியியற்றி லுலகம்போற்றுந்
தனையனு தித்திடு மதன்பினிறையோன் கோயிற்
றயங்குதிருப் பணியாதி செய்தி யென்றான். (கூகூ)

வேறு

மன்னவன் குறுமுனிவனை வணங்கினன் விடைகொண்
டன்னம் வாழ்மலர்ப் பொழில்குலா மணியிடை மருது
தன்னை யெய்தினன் பொன்னியிற் படிந்தனன் சடைமேற்
பன்னிளம் பிறைசூடி தன்பதயுகம் பணிந்தான். (சுo)

மதிதந்திடும் புகழாதிநூல் வகுத்திடு முறையே
பிதிர்க்கள் பூசையும் புரிந்தனன் பிறங்குவே ளென்ன
வுதித்தனன் றனிப்புதல்வன றன்னுளத்திடை மகிழ்ச்சி
கதித்தனன் சொரிந்தான் முகிலென வொளிர் கனகம். (சுக)

காற்றுமென் சருகறல் பொசித்தெண்ணறுங் காலஞ்
சாற்றுமைங் கனலிடைக் கடந்தனிற் றலைகீழா
தோற்றிடுந் தவப்பேற்றோருங் கோடியின்ற் பெரியோர்,
மாற்றமொன்றினி லெள்ளிதினிற் கிடைத்திடு மன்னோ. (சுஉ)

என்ப துண்மையே யென மகிழ்ந்திறைவ னாலயத்துட்
பொன் பிறங்கும் திருப்பணி யலகில பொலிவித்
தன்பினோங்கிடு பூசனை யணிவிழா நடத்தி
மன்பெரும் பதிநிதிகருவை வழங்கினன மிகவும். (சுங)

ஓதுவேதியர் தமக்கு நன்னிலம் பலவுதவி
மீதிலங்கு பல்கால நீள் விருப்பொடு வாழ்ந்து
காதன் மைந்தனிப் பூதலங்காத்திடப் பின்னர்ச்
சோதிதன் மலர்ச்சரோருகத் துணைப்பத மடைந்தான. (சுச)

எண்ணரும் புகழ்ச்சுகீர்த்தி மனிடை மருசெய்தி
யண்ணலைப்பணிந தெண்ணியதனடைந்தவா றிசைத்தேம்
புண்ணியத்தனிக் காசிபனருந தவம் புரிநது
கண்ணனெய்திடப் பணிந்திடு காதைமே லிசைப்பாம். (சுரு)

சுகீர்த்திமன்சருக்கம் முற்றும்.

ஆ திருவிருத்தம்-ருஉரு



உ

## காசிபச் சருக்கம்.

எழிலுறு பிரமர் பதின்மரி லொருவனெனப் புகழ்காசிப முனிவ
னழலுமிழ் திகிரிப் பொருபடைமுகுந்தனுயர்தஞ் சேரியிற் சிறிய
குழவியின் வடிவத் துடன் விளையாடுங்கோதில்சீர்க் கோலமுன் னோக்கித்
தொழுதிடவேண்டுமெனவொருகருத்துதொடர்ந்திடப்பற்பகல்கழிந்து.()

கனத்திடு தவஞ்செய் தன்றியவ்வுருவங் காண்பரிதாகு மத்தவமு
மினதடம்பொழில்சூழிடைமருதிடததினியற்றிடிலல்லையிறனேன்று
மெனக்குறித்தனைய தலத்தினுற் றெருசிற்றிடைப் பெருநலம்பிலையென்னு
மனத்துடன்மருதநிழலுறையிறையோனடி மலர்ப்போற்றினன் பணிந்து.

பெருமகிழ் வெய்தி யானருட்செல்வம் பெற்றகன் றொருசிறை குறித்துக்
கருதியதியற்றத் திரைமணி கொழிக்குங் காவிரித்தண் புனலாடி
யுரிமையியினியதி முடிப்பனமுயத்தாங் குறைந்துண வொடுதுயிலகற்றி
யிரவுநன்பகலுங்கண்ணனைமனத்தி லிருததிநோற்றிட்டனன்சின்னாள். ()

வண்ணநூபுரம் பட்டிகை யொளிர்தரள மாலிகை மகர குண்டலமேற்
றண்மணிச் சுடிகை சுடர்த்தொடி முதலாய்த் தரித்தொரு குழவியினுருவா
யொண்மதி வதன மிளநில வெறிப்ப வுரலிடை யசைத்தவ னாகக்
கண்ணனம் முனிவன் கருதியபடியே கண்ணுறத் தோன்றினன் மன்னோ.

கண்டனன் முனிவன் பணிந்தன னெழுந்தான் கருத்தினி லடங்கிடாம
கிழ்ச்சி, கொண்டனனெளியேன் றனையொரு பொருளாக் கொண்டெழுந்
தருளினை யென்னப், பண்டருசுருதி கொடுபலத் துதித்தான் பங்கயக்கண்
ணனுன் றவத்தால், விண்டிடு துதியானக மிகமகிழ்ந்தேம் வேண்டியவர
ங்கள் கேளென்றான். (௫)

நந்தநந் தனதா மோதர முகுந்த நவிலுமிப் பதியுணீ யுறைந்து
வந்தனைக்கண்டு பணிந்துளோர் துதித்தோர் மனத்திடைக் குறித்தவ வொ
வர்க்குஞ், சிந்தையிலவர்க ணினைத்திடு வரங்கள் சிறந்திடமகிழ்ந்திடவுட
னே, தந்திட வேண்டுமென்றனன் முனிவன் சதுமுகன் முறையீ துரைப்
பான். (௬)

மெய்த்தவமுனிவ நாமுமீண்டுறைது மேலுளவரங்களு மளித்தே
மித்தலம் போல்வதிசைத்திடு முலகத்தில்லையீ துண்மையாமறிவோம
நிதத்தனுண் மகிழ்வுற்றிருக்கு மீண்டவனை நினைக்கு முன்னினைத்தனவுறுமீ
தாய்த்துணர்வோர்க்குப் புகலுதிநீயு முற்றருச்சனை புரிகென்றான். (எ)

முனிவர னிவ்வா றருளிவீற்றிருக்கு முகுந்தனைப் பணிந்தருச்சனைசெய்
தனையவனுரைத்த தன்பிறேவர்க்கு மறைந்தெழின் மருதநாயகனைக்
கனிவுறு மன்பினுடகெலா மிறைஞ்சிக் கதியுறத்தானு மாச்சனைசெய்
தினிதுறுவரம பெற்றிருந்தனன் பன்னுளிசைக்குமத்தலத்தின் மாதயத்திர்.

நீவிருமனைய விடைமருதடைந்து நிகழ்த்திடு மகப்பயிரியற்றின்
மேவுறு பலனமற றுலலையின் மிகவும விளையுமின் பெய்தலாமென்னச்
சேவலங்கொடியோன் முனிவர்களெலருந் தெளிவுறவுரைத்தனன் முனிவர்
யாவருமகிழ்ந் தித்தலத்தினுக்கிணை வேறெங்கு மின்றெனப்பணிந் திசை
த்தார். (௯)

மையறு குணத்துச் செழுந்தவ முனிவீர் மற்றினிச் சூருரம பிளந்த
செய்யவேற்றடக்கைச் சரவணபவனுந் திகழ்வசிட்டாதி மாதவருஞ்
சையமால் வரையினின் றிடைமருதிற சார்ந்து செஞ்சடையிலிந்துடனே
பையராப்புனைந்த மருதநாயகனைப் பணிந்தருச்சித்தவா றிசைப்பாம். (௰)

காசிபசச்சருக்கம முற்றும்.

ஆ. திருவிருத்தம் ருஙரு.



௳

# குமாரபூசைச் சருக்கம்.

மாக நாடவர் போற்றிடை மருதடைந்து வளர்தரு மகம்புரி வதனுக்
கேதமாதவத்தோர்தன்விடைமேற்கொண்டெழுதலு மிலங்குவேற் குகனுந்
தோகை மேற்கொண் டாங்கெழுந்து விண்ணெறியாய்த் தொடரு மாதவ
ர்களுஞ்சூழ, நாக மென்பணி வோனுறை பதியிடையினண்ணினர் பணிந்
தகன்றேகி. (க)

தனதெனப் புலவர் துதிபரங் குன்று தாவிலாவினன் குடிசெந்தூ
ரினமுகில் வதியும் பழமுதிர் சோலை யேரகப்பதி முதலான
கனமுறு தலங்க ளியாவையு மணைந்து காட்டமுன் பணிந்தினி தேத்தி
மனமகிழ் முனிவோர்க் கிண்டமரு தெதிரோ வயங்கிடல் காண்மினென் றி
சைத்தான். (உ)

கண்டனர் சேணினெமிமால் வரை போற்கதித் செழுபுரிசையி னழகுங்
கொண்டலூர் பொழிலு மாடநீ ணிரையுங் கோபுரத் தெழிலு மாலயமு
மண்டு பேருவகை வாரியிற் படிந்தார் வணங்கினர் பரவச மடைந்தார்
விண்டனர் துதிகள் தண்டுனரவரை விடாது கொண்டிடை மருதணைந்தான்.

சங்குலா மருதஞ் சூழிடை மருதிற் சார்ந்திறை பதாம் புயம்பணிந்து
கங்கையைக் குறித்தான் குறித்திடுமுன்னர்க் கதழ்வினி லெய்தினளவளைத்
திங்கள்சூ டிறையோற்காட்டுதற்பொருட்டுந் திளைப்பவர் பவந்தவிர்பொரு
ட்டு, மிங்குறைந் திடுகவென்றனனவளுமீ சனுக்கீசதிக் கமர்ந்தாள்.

அறைதரு மினிய புனிதநீ ரொடுத்தாங் காரபிடேகமு மியற்றி
நறைவிரித்திடுபோதிர்தியாலமலவலந்தரு சிவாகம விதியான்
முறையுயர் பூசைபுரிந்துளமகிழ்ந்தான் முனிவர்களிலங்கெழிற் பொன்னித்
துறையினுங் கங்கைப் புனலினு மற்றைத் தூயதீர்த்தத்தினுமாடி. (ரு)

கற்பனை கடந்த கருணைவாரிதியைக் கண்ணுதற்பொருப் பிணைப்பொருப்பு
விற்பிடித் திடுநாட் பங்கயச் செங்கை விமலனை மருத நாயகனை
யற்புதத் தொடிக்கைப் பெரு நலமுலையை யையங்கரக் கடவுளைப்பணிந்து
சொற்படு மலரா லருச்சனை புரிந்து துதித்தன ரனவிலாத் துதிகள். (சு)

வெயில்விரி மணிப்பொற் சிங்கவா தனத்தின் மீது வீற்றிருந் திடுமொங்க
ளயிலுறு தடக்கைக் குமரநாயகன் றனடிமலர் பணிந் தருச்சித்தார்
பயிலுமஞ் செழுத்தைச் செபித்தனர் விதியிற் பரிவொடு மறறதன் பின்
னோர், வயினுமறந் தேவரும் வேண்டுவ கொண்டு மகமினி திபற்றினா
மன்னே. (எ)

பன்னகம் புனைவோ னெல்லையிலிமயப் பாவையி னுடனடல் விடைமேல
முன்னனர் நின்றனன் கண்டிறைஞ்சினர் நீவிர்முன் வரங்கேண்மி னென்றி
சைத்தான், நின்னடித் துணையை மறந்திடா தென்றும நியதியாயருச்சனை
செயவு, முன்னியபெறவு மருள்கெனப் பணிந்நார் முன்னவ னிந்தனன
கரந்தான். (அ)

இவ்வரமேற்று மகிழ்ந்து மாதவர் களிப்பாவரு முமையொரு புரத்து
நவ்வியங்கரத்தோன் பதசரோருகத்தினொடறு மருச்சனையியற்றி
யவ்வியற் றலத்தை யகன்றிடா துறைந்தா ரததலத் தணைந்திடப பெற்ற
செவ்வியோர்கருததது மற்றொரு தலத்துச் சென்றிடக்குறிகருமோவம்மா. (கூ)

இருந்திடுங் கால மருதநாயகன் முன்னிந்தருள் வரத்தினற்றுங்கள்
வருந்துத லின்றிச்சித்தி யோரெட்டு மனத்தினிற் குறித்தவை பிறவும்
பொருந்தினர்தமைவந் தடைந்தவோர் தமக்கும்புகழுறவுதவின ரொன்னத
திருந்துறு தலத்து முனிவரர் தமக்குச் செப்பினன் சூதமா முனிவன். (கo)

மாசறு தவத்தீர் முனிவரர் சூழ வானவர் மிடையிடை மருதுற்
றீசனை மருத நீழலினுறையு மிறைவனை யிலங்குவே லமலன்
பூசனை புரிந்த திறமிது மீதுபுக லுண்மையரு ளுருவாகித்
தேசுறு புகழ்க்கா ருண்ணிய தீர்த்தச் சிறப்பெடுத்திசை திசைத்திடுவாம்.

குமாரபூசைச்சருக்கம் முற்றும்

ஆகதிருவிருத்தம். ருசச.



சிவமயம்.

# காருண்ணியாமிர்தச்சருக்கம்.

நவையறு தவத்துச் சூதமாமுனிவ னகைமுகப் பங்கய நோக்கிச்
சவுனகர் மொழிவார் †சைசயமால் விலங்கறன்னி னின்றுங் கணைமுனிவர்
பவமறு பொன்னி கங்கைபொன் கூபம் பரவு காருண்ணியதீர்த்த
மிவைகளின் மூழ்கி யேனையதீர்த்த மெவற்றினு மாடினமொன்றீர். (க)

இன்னுமத்தலத்தி லெத்துணைத் தீர்த்த மிலங்கிடு மவற்றிட மியாவை
யன்னவை யமைத்தோரியாவ ரங்கவற்றினுடி யின்புற்றவரியாவர்
பன்னுக வெனவே வணங்கலுஞ் சூதன்பகரு நல்லிடை மருதினுக்கு
முன்னுகந் தெல்லை நான்கியோசனை மேன்மூன்றிற்கு மொவ்வொன்று
குறைவே. (உ)

திகழுறு மிருமுப்பத்து முக்கோடி தீர்த்தமு முறையுமத் தலத்திற்
பகரு மன்னவற்றுட் சில வெடுத்துரைப்பாம் பரவுகாருண்ணிய வமிர்தம்
புகழுறு மவைகளெவற்றினு மேலாய்ப் பொலிவுறு மதிற்கதி ரவனி
தகவொனுமிராசி பொருந்து முற்பகலிற் றனிப்பகல் படிவது விசேடம் ()

மருமலர்த் தலையோன் றிருமகள் கொழுநன் வயங்குருத்திர னெனுமூவ
ருறுவ மாமச்சு வத்தமத் தீர்த்தத் தோங்கு மீசானதிக் கிலங்கும்
பொருவிலன் னதையத்தீர்த்த முறபடிந்து புகழ்மதிவாரத்திற்காலை
வரு*தரிசத்திலேழ் வலம்புரியினுல தெலாம் வலம் புரிபலனும். (ச)

பன்னுநான் மறையை விடுத்திடுபவர் பரகதி யருளி லிங்கத்தைக்
கன்னியர்தமை விற்றவர் மதுவுண்டார் கருதிடு சிராத்தம் விட்டவர்கள்
பொன்முதற் களவுகொலை புரிந்திட்டோர் போற்றிடு குரவனை யிகழ்ந்தோர்
துன்னுமிக் கொடியோரியாரு மத்தீர்த்தந் தோய்ந்திடின் முத்தராகுவரால்

அறைந்திடு பதினென்காய வித்தைகளு மகத்தினில விருறாவு மின்னும்
புறந்திகழ் செல்வ முதலவா மைசுவரியமுங் குறித்திடிற் பொருந்து
மறந்தரு பகையும் பிணிகளுநீங்கு மாறிலா னொரு வெய்துஞ்
சிறந்தகாருணிய வமிர்தமா மதனிற் சென்றினி தாடினர் தமக்கே. (ரு)

†சகியம் என்பது-தென்மொழியில் சையம் என்றாயிற்று.

*தரிசம்—அமாவாசை. இத்திதியில் சூரிய சந்திரர்கள் ஒருங்கு கூடிவரக் காணப் பெறுதலின், அதற் கிப்பெயர் போந்த வாறுகாண்க. [திருச்=காண், பார்.]

மங்கல முறுகா ருண்ணிய வமிர்த வாவியிற் படிந்திடி னொருகாற்
றுங்கமா மினிய தீர்த்தங்க ளனைத்துந் தோய்ந்திடு பேறுவந் தெய்து [ள்
மங்கதி னொருகாற்றருப்பணஞ் செயினோ ராண்டினிற் சார்பிதிர் தினங்க
பங்கமி லொண்ணூற் றுறிற்செய் சிரார்த்த பலன்கொடு பிதிர்களுண் மகி
ழ்வார். (எ)

அங்கதிற் படிந்து துயர்தொலைத் தின்ப மணைந்துளோர் தமிற்சில ரிசை
கங்கைநல் யமுனை தாமிர பன்னி காத்திரா யணிபுகழ் வாணி [ப்பாங்
துங்கபத் திரைகோ தாவிரி பவானி சோணையா தியநதி மின்னோர்
சிங்கள்சூழ் சிகரக் கைலையங் கிரியிற் சென்றெதி ரிறையனைப் பணிந்து

அங்கணு கைலை யிறைவவிவ் வுலகோ ராற்றிடு பவமெலாம் படிவுற்
றெங்கள்பால் விடுதலுச் சேறலா லியாங்க ளெழில்குலைந் துடலெலாங் க
றுத்தே, மிங்கெமை யனைய கொடியதீ வினைவிட் டேகுமா றருள்புரி
கென்றார், *சங்கர னெனுந்தன் பேரினுக் கிசையத் தற்பர னுளமகிழ்ந் தி
சைக்கும். (க)

பொன்னியின் றென்சார் வளரிடை மருதிற் போற்றுகா ருணணிய வமி
ர்தந், தன்னிடை மேட மதிமுத லுளிற் சாற்றுகற் கடகமெய் திடுங்காற்
றுன்னிலை ரொருகாற் றுய்ந்தெழு நதிமுன் றுல்வினைத் துடக்கெலா
மகலும், வன்னிமேற் படிந்த பஞ்சுபோற் கதிரோன் வருமுனந் தொலை
யிருட் கணமபோல். (க0)

நீயிரும் மணைந்து படியினுந் தினந்தி னீங்கிடும் பவக்குல மனைத்துந்
தூயரா குவிரொன் றுரைத்தன னவாக டொழுதுறு விடைகொடு மீண்டு
மாயிருட் குலங்க ளனைப்படர்ந் தனைய மாதலத் திலங்குமத் தீர்த்த
மேயினர் படிந்தார் படியுமுற் படிந்த வினைக்குல மனைத்துமாய்ந் தனவே

இரும்பினுக் கிரத குளிகையின் றுடக்க மெய்திடப் பசும்பொனு மது
போற், பெரும்புன லதனிற் படிதலும் வினைபோய்ப் பேரொளி யடைந்தது
நோக்கி, யரும்புகழ்த் தீர்த்த மடந்தையர் மகிழ்வுற் றணியிடை மருதின்
வீற் றிருக்குஞ், சுரும்புறு கடுக்கை புனைபரஞ் சுடரைத் தொழுதுதோத்
திரம்பல விசைத்து. (கஉ)

அவரவ ரிருக்கு மிடங்களி னணைவுற் றன்றுதொட் டாண்டினுக் கொரு
கா, னவிலுறு மேட மதிமுதற் பகலி னண்ணியாண் டனையதீர்த் தந்தி
னுவகையி னோடும் படிந்தது காறு முற்றிடு கொடியதீ வினையுங்
கவலையு மகற்றி வருவரிவ் வாறு களிப்புறப் பயின்றிடுங் காலை (கங)

* சங்கரன்=சிவன். தன்னை வழிபட்ட ஆன்மாக்களுக்குச சுகத்
தைச் செய்பவன். [சம=சுகம, கரன்=செய்பவன்.]

வேறு.

வட்ட வார்கட லகழியும் வான்றொடு மதிலுங்
கட்டு லாமலர்ப் பொழிலுஞ்சூழ் மிதிலையில் வாழ்வோ
னட்ட மூர்த்திபா லன்பினோ னுலகினி தாள்வோ
னிட்ட ரோமனென் றிசைத்திடு மியற்பெய ருடையோன். (௧௪)

அரிய கேள்விய னுளனொரு காவல னவனுக்
குரிய காதலி பெயரினைச் சுகேசியென் றுரைப்பர்
தெரியு மனனவள் வனப்பினிற் றிருவினிற சிறந்தாள்
பரிவி னோங்குகற் பினிலருந் ததியெனப் படுவாள். (௧௫)

அந்த மாதுட னீடுநா ளின்புறு மனையான்
மைந்த ரின்மையா னென்செய்வா மெனமனம் வருந்திச்
சந்த நான்மறை யறைந்திடு தானங்க ளநந்த
முந்தி யற்றினன் பற்பல தருமமு முயன்றான். (௧௬)

மதங்க னிந்திடு களிறறவ னிங்ஙனம் வளர்நா
ளுதங்க னென்றொரு முனிவர னவனிடத் தற்று
னிதங்க லந்திடு மொழியவ னெழுந்தவன் கமல
பதங்க ளிறபணிந் தியான்செயும் பணியெனை யென்றான். (௧௭)

எண்ணு றும்பல தருமநீ யிழைத்தல் கேட்டுன்னைக்
கண்ணி நோக்கிட வந்தனங் காதலி னீண்டுப்
பண்ணு கின்றன மொருமக மதற்குநின் பாங்கர்
நண்ணு றும்பொருள் களிற்சில நல்குக வேண்டின். (௧௮)

அறத்தின் மேலனீ யாதலி னவற்றையா மேற்றுத்
திறநதி னற்றுமவ் வேள்வியிற் செலுத்துது மென்ன
மறத்தி னீங்கிய மாதவ னிசைத்தனன் மன்னன்
குறித்தி டும்பொரு ளலகில பரியொடுங் கொடுத்து. (௧௯)

எளிய னென்றனை மகிழ்விலாத் துயரமொன் றெய்தித்
தளர்வு செய்கின்ற தன்னது தனக்கொரு தளர்வீண்
டளிமி குந்திடு முனிவர விளைத்தியென் றறைந்தான்
களமி டற்றவன் றனைநினைந் தம்முனி கழறும். (௨௦)

அருணை வண்பதி திருவையா றணிகொள் மாயூர
மருள கற்றெழு முனித்தலம் வளரிடை மருதற்
றுருவ நீடியர் புனல்படிந் துருத்திரற் கிலக்கந்
தருண வில்வமுந் *துரோணமும் பணிந்தெதிர் சாத்தில். (௨௧)

---

* துரோணம்=தும்பை, திரு-என்னும் முதனிலைக்குக் கொல்,

ரேயு தித்திடு மவறறினிற் றிருவிடை மருதி
னேயும் வல்லையி னித்திற மத்தலத் தியற்றி
மேய கண்ணனுந் தசரது வேந்தனு முன்னாட்
டேய் மைந்தரைப் பயந்தனர் சோதிதன் னருளான். (௨௨)

அத்த லங்களி னீயுமுற் றுற்றி னிவ்வாறு
புத்தி ரப்பெறு குவையென முனிவரன் போந்தான்
மூத்த மூரலொண் மனையொடு முனையடு மரசன்
சுத்த நீடுறு மருவணமுன் றன்கினுஞ் சூழ்ந்து. (௨௩)

இனிய தீர்த்தங்கள் படிந்தரு ளீசனை யிறைஞ்சி
வினைய கற்றுறு சிவார்ச்சனை விதிப்படி யியற்றி
யனைய மாதலங் களிற்சில வைகனன் கமர்ந்து
தனைநி கர்த்திலங் கிடைமரு தெனும்பதி சார்ந்தான் (௨௪)

சார்ந்து காருணி யாமிரு தத்தடம் படிந்து
வாய்ந்த சிற்றிடை யுடைப்பெரு நலமுலை மனையாளற்
சூழ்ந்தி றைஞ்சிநின் றருச்சனை துலங்கிடப் புரிவுற்
றேந்துநல்லெழின் மனையொன்றி லிருந்தனன்மகிழ்ந்து. (௨௫)

விருப்பி னோடங்குச் சிலபகல் மேவுமுன் மனைவி
கருப்ப மெய்தின ளனையதோர்ந் தகமிகக் களித்துப்
பொருப்ப வின்மரு தீசன்பான் மிகுமன்பு பூண்டான்
மருப்ப யின்றிடு கோதையும் மகவினைப் பயந்தாள். (௨௬)

கருது மைந்தனைக் காதன்மீ தூர்ந்திடக் கண்டான்
பிருது கீர்த்தியென் றொருதனிப் பெயரினி தளித்தே
மருத நாயகற் களவில்பொன் வழங்கிநற் கதிரோன்
றருதி னம்பல சென்றபின் சார்ந்தனன் மிதிலை. (௨எ)

---

ஹிம்சி என்னும் அர்த்தமுண்மையால் அம்முதனிலையினின்றுந் தோன்றிய துரோணம் என்னும் இப்பதத்திற்கு, இதன் இலை உரக கீடவிஷம், சிலேஷ்ம சந்நி, வாதம், கபம், அக்கினிமந்தம், சிரநோய்களையும், இதன் புஷ்பம் தாகரோகம், சந்நிபாத சுரம், நேத்திர ரோகங்களையும் நீக்குதலான், நோய்களை நீக்குவது என்பது பொருளாதல் அறிக. இன்னும், தும்பை தன் பூவை யெடுத்துச் சிவபிரானைப் பூசித்த ஆன்மாக்களது பாபங்களை நீக்குதலின் அப்பெயருடைத்தாயிற் றெனவும் உணர்க. வில-என்னும் முதனிலைக்குப்பேதி, பிரி என்னும அர்த்தமுண்மையான், அதினின்றுந் தோன்றிய வில்வம் என்னும் பதத்திற்குத் தன்னை யுண்டவர்களுடைய மேகம் குட்டம முதலாகிய நோயை அவரினின்றும் பிரித்துவிடுவது என்றும், தன்னைப்பூசித்தவருடைய பாவத்தை அல்லது தன்பத்திரத்தை எடுத்துச் சிவபிரானைப் பூசித்தவருடைய பாபத்தை அவரினின்றும் பிரித்து விடுவது என்றும் பொருளாதல் போல வென்க.

மிதிலை யுற்றினி திருக்குநாள் விளங்கிளம் பிறைபோற்
புதல்வ னோங்கியெண் ணிரண்டெனும் பருவமுற் றொருந்த
மதிய மைச்சனோ டொருதினஞ் சூழ்ந்துதன் மகற்குத்
தமெனச்செய வேண்டுநற் கடிமணமென்ன. (உஅ)

தேறு மந்திரத் தலைவனு முளத்தினிற் றேர்ந்து
கூறு வானிந்த வரசிளங் குமரனுக் கேற்ப
வேறு கண்டிலன் சுபாங்கியென் றொருகொடி மேவு
மாறில் வண்புகழ்க் காசிமன் னவன்மகண் மனனே. (உகூ)

அனையள் கண்ணுறுச் சுயம்வரம் வரித்திடு மாங்குன்
றனைய னோடுநீ யுறினவன் றனியெழி னோக்கிப்
புனைவள் பூந்தொடை மகிழ்ந்தெனப் புகன்றன னிருப
னினைய தேசெய லென்றவ்வா றேகின னனறே (௩0)

காசி மன்னவ னிவன்வர வுணர்ந்தெதிர் காணு
வாச முற்றிட வசதியும் வரிசையு மளித்தான்
பேசி யுற்றதன் செயலவண் பெரிதிருந் திடுநாண்
மாசில் செங்கதி ரேறினன் மறியதன் மீது. (௩க)

ஆய புண்ணிய தினத்தினிற் கங்கையி னாடிச்
சாயன் மன்னவன் சிலரொடுங் கரையிடைச் சார்ந்தான்
போயி னங்கினன் றனிமையிற் புரவலன் புதல்வன்
மேய நற்பொழு தேகின்ற தென்றுபின் விரைந்து. (௩உ)

முந்து மன்பொடு மூழ்கினன் மூழ்கலுங் கங்கை
பந்த பாசநீக் கிடைமரு தருட்புனல் படிவா
னந்தர் வாகினி யுய்விரைந் தவனொடுஞ் சென்று
ளந்த வாவியி லெழுந்தன னங்குமூழ் கினன்போல். (௩௩)

மிகவு நீடெழி லெய்தினன் கரையிடை மேவிச்
சகம ளந்திடு தவளமால் விடைமிசைத் தயங்கும்
* பகவ னின்னருட் டிருவடி பணிந்தவற் றுதித்து
மகிழ்வு நீஇயெதிர் நின்றனன் மணவர் வியப்ப (௩௪)

---

* பகவன் = சிவன். ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறிற்கும் பகம் என்னும் பெயருண்மையின், அவ்வாறினையும் உடையன் என்பது அப்பகவன் என்னும் பெயருக்கு அர்த்தமாதல் அறிக.

காம னேயவ னெனச்சொல்வார் காமரு மென்னிற்
பூமன் வார்சிலை கொளுமலை திண்மையாற் போதின்
மாமனே யெனக் கூறுவா ரவனெனின் மலர்க்கை
நேமி யுற்றிடு மென்பர்மற் றியாரென நினைவார் (௬௫)

இந்த நீர்மையிற் சிலருறச் சிலரரு கெய்தி
யெந்த வூருனக் கென்றன ரிலங்கும்மப் பதியின்
முந்து தித்ததூஉ மகன்றதூஉம் பகீரதி மூழ்கி
வந்தவாவியி னெழுந்தவூஉம வகைப்படச்சொன்னான். (௬௬)

சென்னி யித்திற முணர்ந்துறு சிறுவனைக் கூவித்
தன்னி லுற்றிட விருத்தின னுங்கவன் முதை
மன்னு கங்கையின் மூழ்கிய மகனெழுந் திலனென்
றினைல் வாரியின் மூழ்கின னிரங்கிமெய் பதைத்து. (௬௭)

தேடு வான்விரைந் தநேகரை விடுதலுஞ் சென்று
நாடு மன்னவர் பாதலத் தளவுமுன் னோடி
வாடி வந்தன ரதுகண்டிழும் மடவிடை நானுங்
கூட வீழ்வனென் றெழுந்தனன் குறிக்கு மப்போது. (௬௮)

வேறு.

நீதுயர் தவிர்தி மன்னநின் புதல்வ னிலவுசீ ரிடைமரு திடத்து
மாதனித் தீர்த்த மாடுதற் கேகும் வளர்புகழ்க் கங்கைதன் னுடனே
பாதல நெறிக்கொண் டேகின னுங்குப் படர்ந்திடற் காவலா மென்ன
மீதலத் திறையோ னருளினு லெவரும் வியப்புற வெழுந்ததோர் வாக்கு.

எழுதரு மொழிதன் செவிப்புகுந் திடலு மிருகரங் குவித்துள மகிழ்ந்து
செழு நகர்க் காசிப் புரவலன் றனக்குச் சென்றுவந் திடுதுமென் றுரைத்
துத், தழுவுறுசேனை யொடுஞ்சில பகலிற் *சயிலமா தியவெலாங் கடந்து
பொழில்புடை யோங்கு திருவிடை மருதிற் பொருந்தினன் புதல்வனைக்
கண்டான். (௭0)

தன்னெதி ரணைந்து பணிந்திடு மகனைத் தடக்கையா லெடுத்துமா பணை
த்து, வன்னியிற் படிந்த மெழுகினுள்ளுருகி மற்றவன் றனைப்பிரிந் ததனாற்
றுன்னிய துயரு மவனிடத் தன்புந் துலங்கிட வெளிப்படு கின்ற
தென்னநீணயனபங்கயங்களினின்றெழுந்திடுபுனலின்மூழ்குவித்தான். ()

வளவுறுங் கூணைந்து தேற்றிடத் தெளிந்து மகிழ்ந்துபின் மகனொடு மேகி
யளவில்சீ ருறுகா ருண்ணிய வமிர்த மணைந்துதோய்ந் தியற்றிநன்னியமங்
கிளர்வுறு மணிப்பொற் கோயிலு ளெய்திக் கீற்றிளம்பிறைநறுங்கண்ணி
யொளிர்சடை மருத நாயகன் பாத வுபயபங் கயம்பணிந் தெழுந்து. ()

*சைலம்=மலை. சிலையால் ஆயது. [ சிலை=கல். ]

### வேறு

அன்றுனைப் பிரிந்த பின்னு னமபுய மலர்தசா டன்னை
யொன்றுசிந் றறிவ தன்று லுன்னல ளுகி யாங்கு
நின்றவென் னிலைமை கண்டு நினைவுதந் தருளாற் கூவி
யின்றெதிர் காட்சி தந்து விடைமரு திறைவ போற்றி. (௪௩)

மருவிடை மலர்த்தண் கொன்றை மதிவளர் சடைய போற்றி
கருவிடைப் புகாம லென்னைக் காத்தருள் கடவுள் போற்றி
பொருவிடை யூர்தி போற்றி பூரண புராண போற்றி
திருவிடை மருதில் வாழுஞ் செய்யபொற் சோதி போற்றி. (௪௪)

என்னநின் றேத்துங் காலை யீசனு காச வாக்கான்
மின்னுவேன் மன்ன நம்பால் வேண்டுக வரங்க ளென்றான்
மன்னனின் பதத்தை யென்று மறந்திடா மனமு மன்புந்
துன்னுறத் தருக வென்றான் சோதியு மவற்க ளித்தான். (௪௫)

தகர்மதிப் பிறப்பி லீசனை றன க்கெழில் விழாவுஞ் செயதாங்
ககமகிழ் மணிப்பூண் செம்பொ னளவில வுதவி செய்து
பகருட் டீர்த்தஞ் சூழப் படித்துறை யமைத்துப் பின்னர்
மகனொடு மகிழ்ச்சி கூரு மன்னவன் மிதிலை யுற்றான். (௪௬)

அங்கவன் வார ணாசி யடைந்தநா ளவன்றன் மைந்தன்
பொங்கெழி லினிது கண்ட புரவலன் புதல்வி யன்று
னிங்குவந் துற்ற பின்ன ரியானவன் றனக்கே யெய்வன
கொங்கலர் தெரிய லென்னக் கூறின ளிருந்தா ளன்றே. (௪௭)

உற்றிடத் தீர்த்த மெய்தி யோங்கெழி லடைந்து கன்னல்
விறற்னிக் காளை யென்ன விளங்கிடு மகனோ டோங்கு
கொற்றவன் வந்த செய்தி குலவுறு மொற்றர் கூறக்
கற்றவர் புகழுங் காசிக் காவல னுவகை யெய்தி. (௪௮)

கதுமெனப் புதல்வி கோதி மற்றவள் களிப்பு நோக்கிப்
புதுமண வோலை தீட்டிப் பொலிவுறு மிதிலைக் கேவி
விதுமுக மருகன் றன்னை மேவுற வழைத்து நன்கு
மகமலர்க் கோதை மின்னை மணம்புரிந் தளித்தான் மன்னே. (௪௯)

இன்னுமித் திறமத் தீர்த்தத் திடைப்படிந் தெண்ணி லார்கண்
மன்னிய துயர நீக்கி மனத்தினிற குறித்த வெல்லாந்
துன்னினர் பெரிதும் மீது சொல்லுதும பாணதீர்த்த
மென்னவோர் தீர்த்த மாங்கே யிலங்கிடு மதன்றன் மேன்மை. (௫௦)

காருண்ணியா மிர்தச்சருக்கம் முற்றும்.



சிவமயம்.

# பாணதீர்த்தச் சருக்கம்.

வாணி நாயகன் முதலினோர் வணங்கிடை மருதத்
தாணு வின்வட கீழ்த்திசைத் தங்குமோர் தீர்த்த
நீண லந்தரு விற்கிடை நிகழ்த்துமீ ரொட்டிற்
பாண தீர்த்தமென் றதன்பெய ருலகெலாம் பரவும். (௧)

தெரிக்கு மப்பெரு வாவியின் றேவதை யிராமன்
விரிக்கு நீழலோ ரரசதன் றெனபுடை மேவும்
பரிக்கு மன்னனைச் சூரம் பிளந்தவேற் படையோன்
றரிக்கு மந்தடத் தருகினில் வசிட்டனு நவத்தோன். (௨)

தண்ட கத்தனி வனத்திடைச் சார்ந்தெழி லிராமன்
பண்டு சஞ்சரிப் பவனொரு பகலினு கடைந்தான்
கண்டி லன்புன லுறுநிய மஞ்செயக் கையின்
*வண்டு தன்னைமன விடுத்தனன் மலர்ந்திடு †பூமேல். (௩)

அங்க ணீடொரு வாவியா யதனிடை நின்றும
பொங்கு தண்புன லெழுந்தது பொருந்துமப் புனலின்
மங்க லம்பெறப் படிந்தன னியமங்கண் மற்றும
பங்க மின்றிநன் கியற்றினன் பரிந்தனன் பின்னர். (௪)

அரசு நீழலுற் றிருந்தன னிருந்திடு மமையத்
துரைசெ யுங்கணை வடிவதா யநாதியா யொளிரும்
பரசி வன்றனைக் கண்டனன் படிகரின் வடபால்
விரைசெய் தண்மலர் மருவுற விளங்கொரு தருக்கீழ். (௫)

எழுந்து சென்றனன் பரிவொடும் விரைவொடு மெதிரோ
விழுந்து மெய்யுறப் பணிந்தனன் விளம்புதன் கணைசெய்
யழுந்து நீர்கொடு மகிழ்வுட னாட்டினன் கிடைத்த
செழுந்தண் கூவிள மாதிகொண் டருச்சனை செய்தான். (௬)

மேற்றி சைத்திரு முகத்தினின் றித்திறம் விளைத்திட்
டேற்று வெல்கொடிப் பரமனே யிடைமரு திறைவ
தோற்றி யிங்கெனக் குணர்வுதந் தனையெனத் துலங்கப்
போற்றி செய்தனன் செய்துமே லின்னன புகலும் (௭)

---

* வண்டு=பாணம். † பூ=பூமி.

நீடு வாளியிற் செய்திடு நிமித்திரு னிதனுக்
கீடு மன்னுறப் பாணதீர்த் தப்பெய ரியையுங்
கூடு மன்புட னிதனிடைக் குறுகியா டினர்க
ளாட கததிரு நாட்டினி லமரரா யவிர்வார். (அ)

இட்ப மாமதிப் பூரணை யினிலிதின் மூழ்கிப்
படவ ரரவிணி யிக்தனிப் பரமனைப் பணிந்தோர்
திடம தாயுறு மன்பினு லருச்சனை செய்தோர்
கடமி யையந்திடு சிவபத நண்ணியின் புறுவார். (௯)

என்று நீடிய வரங்கொடுத் தெழிலருட் புனலிற்
சென்று மூழ்கிமா மருகனன் னிழலிடைத் திகழுங்
குன்ற வில்லியைப் பணிந்தவ னருளுநீ டிக் குலவு
மன்ற *லஞ்சரோ ருகபத மனதிநீ டியகன் றான். (௧0)

அனைய ருக்கிய பாணதீர்த் தந்தனி லாடி
யினிய பாறயிர் நெய்பசு வேதியர்க் கீந்தால்
வினைகள் யாவையு மகன்றிடும் விளங்குவங் கிருந்து
மனதி லஞ்செழுத் தெண்ணிடின் மருவுநீ டின்பம். (௧௧)

சாற்றி டன்னதிற் றிலங்கொடு தருப்பண மியற்றி
லாற்ற லுறதிடு சயைகனி லாற்றுமப் பலனும்
போற்றி டன்னதா மத்தடம் பொருந்திய வேற்ற
மேற்ப ராசர தீர்த்தமான் மியமெடுத் திசைப்பாம். (௧௨)

பாணதீர்த்தச்சருக்க முற்றும்.

—):◡:*:◡:(—

உ

சிவமயம்

## பராசரச் சருக்கம்.



வசையில் காருணி யாமிரு தத்தினோர் வடகீழ்த்
திசையி னோர்கணை வீழ்ந்திட செய்ததினொ தீர்த்த
மிசை வளர்த்திடு பாராசர தீர்த்தமென் றிலங்கும்
விசைகொள் வின்மதி மூழ்குதல் விசேடமா மதனில். (௧)

*சரோருகம்=தாமரை. [ஸரஸ்=தடாகம், ருஹ்=முளை, வளர்.] எனவே தடாகத்தில் முளைப்பது என்க.

வாயு தேவன்மற் றதற்குறு தேவதை மருங்கின்
மீயு யர்ந்துநின் றிலங்குமோர் வேம்பெனுந் தாரு
மேய தன்புடைக் கண்ணுவ முனிவரன் விளங்குங்
காயுஞ் சூற்படை வயிரவ னதைநிதங் காப்போன். (௨)

பொலியு மன்னதிற் படிந்தனர் பூசுரர் தமக்குத்
திலம ளித்திடிற் றானமாய்த் தீவினை யகலுங்
குலவு சில்பக லதன்புடை வசித்திடிற் கூரு
மேலிவு நீங்கிடும் புனிதமெய் திடுமன மிகவும். (௩)

அன்ன தாகிய தீர்த்தமா புரத்ததா யவிருந்
துன்ன திற்படிந் தநேகர்கள் பழவினை தொலைத்தோ
ருன்னு மற்றதைப் பராசர தீர்த்தமென் றுரைத்த
தென்ன காரணத் தாலெனி லஃதெடுத் திசைப்பாம். (௪)

மூச்ச கந்திரி புகழுறு பராசர முனிவன்
கச்ச கந்திக ழிளமுலைப் பனிமொழிக் கனிவாய்
மச்ச கந்தியைப் புணர்ந்ததின் வருந்தவ மகற்ற
நச்ச கந்தனம் விளைத்திட நாளபல கழித்து. (௫)

ஓது மோர்பக லெதிர்ப்படு முரோமச முனிவன
பாத பங்கயம் பணிந்தெழுந் தன்பொடு பகரு
மாத வத்தனி மேருவே மறையினு கரமே
சோதி தன்னருட் கினியனே யெனப்பல துதித்து. (௬)

பன்னு தெண்டிரைப் பரவைசூழ் பாருலகிதனுண்
மன்னு புல்லறி வுற்றிடு மனுளர்நெஞ் சென்னுந்
துன்னு மீனினங் களைககவர் தொடர்வலை யன்றோ
கன்னன் மென்மொழிப் பொன்னனார் கதிர்முக வலயம். (௭)

*ஊழி னிற்பெரு வலியுள யாவைமற் றொன்று
சூழி னுமஃ ததற்குமுன் றோன்றிடு மனதே
யேழை யேனெழின் மச்சகந் தியினிடத் தின்பம்
வீழ வுற்றன னதன்முன் விலக்கில துள்ளம். (௮)

அன்ன தன்பினீண் டதைக்குறித் தருவருப் பெய்தி
யின்ன லுற்றிடு கின்றதி யானுமத் துன்பந்
தன்னின் மூழ்கினேன் புகலுமிக் கொடுந்துயர் தவிர்தற்
கென்னை செய்குவ னென்றன னுரோமச னியம்பும். (௯)

*திருவள்ளுவர் குறள். ௩௮-ம் அதிகாரம்,-ஊழ்.
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

## வேறு.

தேறுபொற் பணிகளூர் திகழு மாடையு
மாறிடப் பிரித்திடின் மாத ரொன்றிடல்
கூறிடு மலப்புழுக் குரம்பை யேயலால்
வேறுறக் கண்டதென் விளம்பு காலையில். (க0)

தோலிது நரம்பிது சோரி நீரிது
கோலுறு தசையிது குடர்மற் றீதென
வேறுறச் சிலபக லெண்ணும் போதினின்
வேலிவிழி மகளிர்பால் வேட்கை நீங்குமால். (கக)

திருவுறு மகளிர்பால் வேட்கை தீர்ந்திடின்
மருவிடும் வீடனூர் மருவு போதினும்
பழிவத் திடைமனம் பற்றி நிற்பினு
மிருவினை சமனுறு மெனினு மெய்திடும். (கஉ)

நிலைபெறு பரத்திடை நிலவு நெஞ்சனை
யுலகினி லவர்செயும் வினைவந் தொன்றிடா
வலியுறு மந்திர மருந்து வல்லனை
நலிவுசெய் திடுங்கொலோ நண்ணுந் தீவிடம். (கங)

தூயவ நின்மனந் தொடர்ந்து நிற்றலிற்
றீயது நின்னையுஞ் சேர்ந்தி டாதினி
யாயினுஞ் சபலநீ யடைந்த தன்மையான்
மேயது போம்வழி விளம்பு வாமரோ. (கச)

இனிதரு ளிடைமரு தடைவுற் றெண்ணில் சீர்க்
கனகதீர்த் தத்தினிற் கலந்து மூழ்கியே
புனிதநீர் வேணியற் பணிந்து போற்றிடிற்
றுனிதவிர்ந் துன்மனஞ் சுத்தி யெய்திடும். (கரு).

என்றநீ டருளொடு மினிதி யம்பினு
னன்றென விடைகொடு நவில்ப ராசரன்
சென்றுயர் முனிவரர் சிலவர் சூழுறத்
துன்னெறி யிடைமரு திடத்திற் றுன்னினன். (கசு)

கலந்துறு வளமலாங் கண்ணி னேக்கினு
னலந்தரு பொன்னியி னண்ணி யாடினு
னிலங்கருள் வாவியு மெழில்கொள் பொன்னெனத்
துலங்குறு வாவியுந் தொடர்ந்து மூழ்கினன். (கஎ)

மருதிறை யவனடி யணங்கி யேத்தினன்
பெரிதுகந் தேகினன் பிறங்கு மத்தடத்
தருகினிற் சிலபக லமர்ந்தி ருந்துதன்
கருதுமன் மனத்துறு கலக்கந் தீர்ந்தனன். (க௮)

வேறு.

கனகமா தீர்த்தந் தோய்ந்து கடுவினைதொலைத்தோய் வேளை
முனிபரற் பணிந்து மேலா மொழியவன் கருணை பெற்றோ
னினையசீர்த் தடத்தின் பாங்க ரிருந்தகத் தூய்மை யுற்றோ
மெனநினைந் ததனைப் பின்னு மெழில்பெறத் திருத்து வித்தான். (க௯)

பகருமந் நிமித்தந் தன்னாற் பராசர தீர்த்த மென்னப்
புகழுறு மினிய நாமம் பொருந்திய தினியெம் பாவத்
துகளறு சோம தீர்த்த மான்மியந் தொடங்கு கின்றோந்
திகழுறு முமையாள் பங்கன் சேவடிக் கன்பு மிக்கீர். (உ௦)

பராசரச் சருக்க முற்றும்.

உ
சிவமயம்.

# சோமதீர்த்தச் சருக்கம்.

இந்தி ரன்முதற் கடவுள ரிசைபெறு குரவன்
சந்தி ரன்றனை யடைந்தெதிர் தாழ்ந்துநின் றேத்தித்
தந்தி ரஞ்சில வுணரநீ தருகெனக் கென்ன
முந்தி ரந்திட வினிதென மொழிந்திடு நாளில் (க)

காரா யந்தரத் தலைத்திடு கருங்குழற் பசும்பொற்
றேரா யச்சுறுத் தல்குலா டிகழவன் மனைவி
தாரா யென்பவள் கன்னலந் *தனுத்தனு வில்லோன்
போரா யாற்றிட வலியிலானை மிகுமயல் பூண்டு (உ

அனுதி னந்தரு பழக்கமு மிகுந்திடு மழகு
மினிது மேவுசந் திரனிடத் தியன்றனைக் கொடுநா

*தனு என்னும் பதங்களுள் முன்னது வில் எனவும், பின்னது சரீரம் எனவும், பாணங்களைப் போகவிடுதலினாலும் உணவு முதலியவற்றாற் பெருத்தலினாலும் வில்லிற்குஞ் சரீரத்திற்கும் அப்பெயர்கள் ஆயின எனவும் உணர்க. [தனு=எதிரில் வீசு அல்லது போடு. தனு=விஸ்தாரமாக்கு அல்லது பரப்பு]

மனைய மாரனை வேறுமென் றவன்றனை யழைப்பான்
முனிகொ ணெஞ்சினுக் கிசைந்துமுன் விடுத்தன னேறு. (ரு)

மேவு மன்புறு தாதையே யாயினும் விளம்புந்
தாவில் காதல ராயினுஞ் சகோதர ரெனினும்
யாவ ராயினு மிளமையு மெழிலுமெய் தினரோற்
பாவை மீர்மன மவரிடைப் படர்ந்திடு மன்றே. (௬)

விகுதி முன்னிடை நிலைமுத லவற்றொடு மேவப்
பகுதி யின்பொரு ளதனிடத் தவாவுறு பரிசிற்
றெகுதி யுற்றிடு நூன்முலை தொடர்ந்திட மயங்கி
மிகு திடத்துறு முளத்தசந் திரனுமே வினனே. (௭)

கலக வேல்விழி யவர்முகங் காணினு மவர்க
ளிலகு தீஞ்சொல்கேட் பினுமவர் தம்மையெண் ணிடினு
முலகி லாடவர் மனமுரு கிடுமெனி லுவமோ
வலிமை செய்திழுத் திடினவர் மறுத்திட வல்லார். (௮)

மூத்த மூரலின் மயற்கடன் மூழ்கிநீ டின்பந்
துய்த்த னன்னுளந் தேறினன் சூழ்ந்துபின் னவளை
யுய்த்த காதலிற் கொண்டுதன் னுலகினி லேகி
வைதத னன்னினி திருந்தனன் மருவினன் மகிழ்ச்சி. (௯)

அன்ன தோர்ந்துட னெழுந்தரு மமரர்க ளோடு
பொன்னும் வெள்ளியுஞ் சதமகன் கொலுவினிற் போகி
மன்னு மித்திறம் புகன்றனர் மற்றவன் வெகுளுற்
றென்னை செய்தன னவன்றனை யழைமினென் றிசைத்து. (௧௦)

தேவர் கூவிட வெதிருறு திங்களை நோக்கி
யாவரும் பணிந் திடத்தகு குரவனுக் கிசைந்த
பாவை தன்னைநீ விரும்புதல் வான்மையோ விங்குன்
றேவ றன்னையு மவளையும் விடுகெனி லுறைந்தான். (௧௧)

பற்று பாவமும் பகையொடு பழியுமக் களங்கன்
சற்று மோர்ந்திலன் செருக்கினுற் றழீஇயவெங் காமங்
குற்ற மேற்றிடு முதலினுங் கொடியதை யுன்றே
மற்றெ னக்கவ டனைவிட மன்மிலை யென்றான். (௧௨)

அந்த வாசகங் கேட்டலு மமரர்க ளெவரு
மிந்தி ரன்றமக் கிசைத்திடு மேவலுஞ் சினமு
முந்து றப்படை கொடுசமர் செய்திட முன்னிச்
சந்தி ரன்றனை வளைந்தனர் பரிதிபோற் சார்ந்து. (௧௩)

நின்ற சந்திரன் றன்புடை நிகழ்பரி சனமுந்
துன்று மற்றுள படைகளுஞ் சூழ்ந்திடத் தானுங்
கன்றி முன்னுற வெதிர்ந்தனன் கலந்திரு படையு
மொன்று வானவ ரீரு மெதிரொதி ரூற்று. (கஉ)

தேரி லேறியும் விமானமேற் றிகழுறநின் றுஞ்
வார்வி லம்புவாள் வேல்கந்த மழுவெழுத் திகிரி
கூர்கொண் முத்தலைச் சூலமா தியபடை கொண்டு
பேரரி யற்றின ரார்ப்பொடு டுணரியோ ரிரண்டின். (கங)

விண்ண திர்ந்தது திகாந்தமு மதிர்ந்தது விளங்கு
மண்ண திர்ந்தது பாதல மதிர்ந்தது மற்றும்
நண்ணு மித்திற மதிர்ந்திட வேலையி னதிரு
டண்ண லுந்திரு மாலுநான் முகனுமங் கணைந்தார். (கச)

அரனரு ளேவ றன்னு லரவிந்த னருகி னெய்தி
யிருவர்தம் போரு மாற்றி யிந்துவைச் சினத்தி னோக்கி
வருதிவெண் மதியை நீயோர் மதியிலா திதனைச் செய்தாய்
குருவினில் லவண்மேற் காதல் கொள்வரோ வறிஞ ரன்றே. ()

அவடனை யினிமேலேனும் விடுதியென் றறைந்தா னல்லோன்
சவலமீ தார வந்தத் தாரைதன காத லாலே
பவமொடு பழியும் வந்து பலித்தன பலித்த போலுங்
கவலையென்னினியோர்போதுங்கைவிடேனவளை யென்றான். ()

அந்தணன் பின்னுந் தக்க னாற்றிய வேள்வி தன்னின்
முந்துநீ பட்ட பாடு முழுவது மறந்தாய் கொல்லோ
வந்தது நாமிங் குன்பால் வள்ளலே வலினு லன்றோ
தந்திடா யெனிலன் னாளைச் சபிக்குது முன்னை யென்றான். ()

அயனிது கூறவஞ்சி விடுத்தன னவளை யல்லோன்
வயினுறு கருவினோடு நாணொடு வயங்கு மன்னாள்
பயிலுறு *குருவின் முன்போய் நின்றனள் பாரத்திட் டன்னு
னியல்பிதோ மாதர்க்கென்னக் கொடுமொழி பலவு மீந்தான். ()

வெகுளலும் பயந்து நாணி விதிர்ப்புற வொதுங்கி நின்றான்
மகவினை யுயிர்த்தாண் மற்றம் மகவினை மகிழ்வி னோடெந்
திகழுறு கலையி னுனென் சிறுவனென் றெடுக்க வந்தான்
றகவுறு குருவு மென்றன் றநயனென் றுரைத்துச சார்ந்தான். ()

---

*குரு=சூராசாரியன். [கிரு=சப்தி, பேசு.] எனவே, தேவர்கட்கு ஞான த்தை உபதேசிப்பவன் என்பது பொருளாதல் அறிக.

இருவரு மதியி லாராய்ச் சமரினுக் கெழுந்திட் டார்க
ளருமறைக கொடியி னுன்மற் றனையதை மறித்துத் தாரை
திருமுக நோக்கி யிந்தச் சேயினை யெவர்பாற் பெற்றாய்
வெருளுறே லுரைத்தி டென்றா னுரைத்திலள் வெள்கி யென்றும்.

மைந்தனங் கதனை யோராது தாயுறு வதன நோக்கிச்
சிந்தையிற் கபட மென்னே செப்புதி யுள்ள தென்றா
னந்தண னவனைச் செங்கை யயாதி யன்னுளை நோக்கித்
தந்தையா ரிவனுக் குண்மை சாற்றுதி வெள்க லென்றான். (உக)

விதுவென் றாரணி னோடு மெல்லென விளம்ப லுற்றாள்
கீதுமென மகிழ்ச்சி யோடு கலைமதி யோடி யந்த
மதலையைக் யெடுத்து வந்து மடிமிசை யிருத்தி யன்னு
னிதமுறு மறிவை யோர்ந்து புதனென நாம மீந்தான். (உஉ)

அன்னதை யுணர்ந்த தேவ ரனைவரு மதியை யாசான்
பன்னியைப் புணர்ந்த பாவி யென்றுமுன் பழித்திட் டார்கள்
பொன்னவ னெழுந்து சீறிப் பொருந்திடுன் னழகு மங்கி
யின்னலுங் கயமு மெய்தித் திரிதியென் றீந்தான் சாபம். (உ௩)

சொற்றிடு முன்ன ரந்தத் தூயவன் சாபம் வந்து
பற்றிய தஃதி னோடு பாவமு மருவித் திங்க
ளுற்றுளம் பதைத்துச் செவ்வா யுலர்ந்து தன்மேனி நீடு
பெறும்பழி திறத்தி னோடு கயமுமேற் பொருந்தி வாழ்கி. (உ௪)

## வேறு.

மெய்த்த வத்துரு வாசனே டிவையெலாம் விளம்பி
யித்தீகைப் பெருந் துயரினுக் கென்செய்கே னென்றா
னத்தவத்தினு னிவைகள்வெங் கொடுவினை யாகு
முய்த்திடின்னவை தமக்குமீண் டொருமருந் துளது. (உரு)

அந்த மில்புக ழிடைமரு தடைந்துபொற் றீர்த்த
முந்து றப்படிந் தவணுறை முதல்வன் றன்னை
வந்த னஞ்செயி னல்லதை மருவுமித் துன்ப
மெந்த வாறெவ னியற்றினு மேகிடா தென்றான். (உ௬)

நன்றெ னப்பதர்ந் தவனுமத் தலத்தினை நண்ணித்
துன்று மன்புட னனையதீர்த் தந்தனிற் றோய்ந்து
மன்ற லொன்றுகொன் றைச்சடை வரதனைப் பணிந்தான்
கன்று வெவ்வினை யகன்றது கதிரின்முன் னிருள்போல். (உ௭)

பண்ணி னீடுபற் பலதுதி பகர்ந்தனன் பரமன்
விண்ணின் மால்விடை மீதுமை தன்னுடன் வெளிநின்
றெண்ணி லாவர மகிழ்வுற வருளொடு மீந்தான்
தண்ண வெண்மதி யரனடி வணங்கிநின் றேத்தி. (உஅ)

*ஈசன் மேனியெண் வகையுளொன் றாய்விளங் கெழிலுந்
தேசு மிக்கவன் விழியினொன் றாகிய சிறப்பும்
வாச நீடவன் வேணியில் வயங்கிடு வாழ்வும்
பேசு வண்கலை தேய்தலும் வளர்தலும் பெற்று. (உகூ)

மருத வாணனைப் பின்னருஞ் சிலபகல் வணங்கக்
கருதி யத்தலத் திருந்தன னிருந்திடுங் காலை
பொருவில் சீரருள் வாவியின் பூருவ திசையி
லொருச ரம்படு சேய்மையி லொருதடஞ் சமைத்தான். (௩௦)

சோம னாக்கிய திறத்தினாற் றுலங்குமவ் வாவி
சோம தீர்த்தமென் றடம்பதைச் சூழ்ந்துறுந் தெய்வஞ்
சோமன் காவறன் னீசனுங் கவுதமனா றுறவோன்
சோம வாரமாந் தினத்ததிற் றோய்ந்திடல் விசேடம். (௩௧)

தூய வப்பெரும் புனலிடை யன்புடன் றோய்ந்து
சாயல் வாணுதற் கன்னிகை தன்னுட னினிய
பாய சங்கனி வகையிவை பனவர்கட் குதவிற்
றீய பஞ்சபா தகமுத லியாவையுந் தீரும். (௩௨)

அருத்தி தன்னுடனத்தடந் தனிலணைந் தாடி
விரித்த தானமீந் திவ்வணம் வெவ்வினை தொலைத்துக்
கருத்த னீடரு ளெய்தினர் கணக்கில ரின்னுந்
திருத்த வன்புரி தீர்த்தமொன் றுளததூஉந் தெரிப்பாம். (௩௩)

காக மின்புறு வாவியி னிருதியிற் கணையொன்
றேகி வீழ்ந்திடு சேய்மையி னினிதொரு தீர்த்த
மாக வின்கொடு சந்திரன் பெயரினால் வயங்கு
மாகு மங்கதின் முனிதுரு வாசனு மறவோன். (௩௪)

---

*ஈசன் மேனி எட்டு பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்பனவாம். இதனை, "ஐம்பெரும் பூத மிருசுடரான்மாவென் றிவ்வேறலகில்ல யவைதா, முன்பெரு வடிவமெனப்படுமென்றே யோர்ந்துளோர்க் கிங்கிது தன்றே, லெம்பிரானியே நிறையதிட்டாதாவென்பதற் கையமு முளதோ, வம்பரா மூர்க்கப் பேய்கடா மயக்கான் மாறுபாடுறப் பிதற்றுவரோ." என்னுஞ் சிவதத்துவ விவேகச் செய்யுளான் உணர்க.

திங்கள் காவலன் விருக்கமேர்ச் செழுந்துணர் வகுளஞ்
சங்க ரன்றனித் தேவதை சார்ந்ததிற் படிவுற்
றங்கு நெய்தில நெய்திடு கலையெழி லரிசி
கொங்கு லாமலர் சந்திகை யன்பொடு கொடுக்கின். (௩௫)

பூசை மிச்சில்பின் குலத்திறோர் புசித்திடு சேட
மாசை பூட்டிடு மடந்தைய ரயின்றிடு சேடம்
பேசு மின்னவை யருந்திய பெரும்பவ மகலுந்
தேசி கந்தரும் வன்மையுஞ் செல்வமும் பெருகும் (௩௬)

கறையு லாம்பனி மதியினர்ப் பலபகல் கடந்தோர்
மறமி யற்றியன் னதன்பெரு வலியினாற் கலைகள்
குறைவ தேயலா னிறைவுறுக் குணத்தினை நோக்கி
யுறுமி தற்கிணி யென்னியற் றிடுவதென் றுன்னி. (௩௭)

தருண பானுவின் மாதரார் தரித்திடு குழைக
ளிருண் மறைத்திடு மெழிலிடை மருதடைந் திறைவி
கருணை வாவியிற் படிந்துசென் றன்பொடு கவின்செய்
வருண மால்விடை மருதநா யகனடி வணங்கா. (௩௮)

இலகு பற்பல துதிகள்செய் தேகிமுன் னுரைசெய்
யலரு ரும்புனற் றடஞ்சமைத் தணியுறு கலைகண்
மலகு விர்தய னருளினால் வளர்தல்கண் டெந்தான்
கலையி லென்னிலென் னிருக்கினுங் கவின்மரு விடுமோ. (௩௯)

பண்டு வந்துவெம் பாதக மகற்றிய பரிசுட்
கொண்டு வந்துபின் னருமுறு குறையதூஉ மகற்றி
விண்ட லத்துறு தன்பதி மேவினை னன்றி
மண்டு மாலுழந் தயருமோ மருந்துகை கண்டோன். (௪0)

மருந் துலங்கிய கடுக்கைபோ னடித்துணை வனசம்
விரித திலங்கிடு தடாகமாங் கருத்தினீர் விதுவின்
றிருந் தகுந்தட மிரண்டுறு சிறப்புமிங் கிசைத்தா
முருந் திரப்பெருந் தீர்த்தமான் மியமினி யுரைப்பாம. (௪௧)

சோமதீர்த்தச்சருக்க முற்றும்,

சிவமயம்

# உருத்திரதீர்த்தச் சருக்கம்

வன்ப ளிக்குலம் பூண்டிடு மருதவா ணனுக்குத்
தென்பு றத்திலெய் தவன்விழித் திருவருட் டூர்ந்த
மின்ப மீந்திடு முருத்திர தீர்த்தமென் றிலங்கும்
பின்பு ரைத்துமப் பெயரதற் கெய்திய பெருமை. (௧)

கருட னன்னதைக் காத்திடு மீசனே கடவு
ளிருடி பிப்பிலன் றமாலமாங் கிலங்கிடு விருக்ஷ
மொருதி னம்படிந் ததனிற்றேன் கம்பல முதவிற்
றிருகு வெம்பவத் தோடுதீப் பிணிகளுந் தீரும். (௨)

முன்னை நாளிடை நிமியென மொழிந்திடுந் திகிரி
மன்ன வன புரி தவத்தினால் வருதிட்ட கேது
வென்ற ங காவலன் மகவின்றித் தருமமிக் கியற்றிப்
பின்னெ டும்பகல் கடந்தொரு புதல்வனைப் பெற்றான். (௩)

மண்ட லமபெரு மகிழ்வுற வந்திடப் புதல்வ
னண்டர் நாயக னடியர்பா லன்புடனளித்த
வண்டவிப் பொருட் பயனென வளர்தரு நாளிற்
கண்ட மாலையென் றுரைக்குநோய் கண்டது களத்தில். (௪)

களம திற்பிணி யுறமகன் வருந்துதல் காணா
வளவ னேருறு மருநதொடு மந்திரச் செய்கை
யளவி லாவகை யாற்றலு மவற்றினீய் கிலதென்
றுளம திற்றுயர் கொண்டவ ணுறறன னன்றே. (௫)

காத்தி யாயனா முனிவனக் காலையங் குற்றான்
பார்த்தி பாசம் ஞர்க்கியங் கொடுத்தனன பணிவுற்
றார்த்தி யாதுளத் திடையென வவனுள துரைத்தான்
மாத்தி யானமுற் றான்றனை மாதவ னிசைக்கும. (௬)

மன்ன நின்மகன் புருவுந் தனிலொரு வணிக
னன்ன வன்மனைப் புறத்தா னலய மொன்று
துன்னு மங்கதிற் சிதைவுறு சிலைகளைத் தொகுத்துப்
பொன்னதாமபடி விலைசெய்யாக் கவர்ந்தனன் போலாம். (௭)

பிரச மென்மல ரணிசடைப் பிரான்றனை யொருகாற்
றரிச னஞ்செயா வவனடி தலைக்கொளு மதனு

லரச னாயினு னாலயச் சிலைவிலை செயாவுண்
டெரிசி னாலனான் களத்தினைச் சூழ்ந்ததிக் கொடுநோய். (அ)

## வேறு.

கறைமிடற்றோன் பொருள்கவரினெள் ளளவுகொண்டோம் கடும்பிணியுற் றலைந்ததன்பி னிரயந்தன்னி, லுறைதரவர்செங் கதிர்மதிய முள்ளகால முடனுணர்ந்து கவர்தலுற்றி னடங்கியுள்ளம், பெறுபொருளி னாற்குணிந்த முதவியேழை பிழைபொறுத்தி யெனப்பணியி லனையபாவ, மிறுதியுறு முணர்கிலராய்க் கவர்தல்செய்யி னிருதுணிநங் கொடுத்திறைஞ்சி னேகு மன்றே. (கூ)

மறையுணர்ந்தோர் குரவர்பொருள் கவரினோர்ந்து மற்றதனுக் கிரட்டி கொடுத் திறைஞ்சல்வேண்டு, மறிவிலராய்க்கவர்ந்திடினும்பிறர்பொருளைக் கொளினு மத்திறமீந் திடவேண்டு மல்லல்வேண்டா, ருறுமிவர்கட் கோது பணி செய்தகண்ணு முறுபரி வர்த்தனைசெய் யிடத்துந்தக்க, முறைமையிற் கொண்டிடலாகு மின்னோர்தத்த முன்னமுகந் தளித்தனரோற் கோடலாகும். (க0)

எப்பவமு மெய்ப்பிணியுந் தீருந்தெய்வ விடைமருதி னுருத்திரதீர்த் தத்து மூழ்கி, னிப்பொழுதே நின்மகற்கொண் டேகுகென்ன விசைத்திட்டா னிசைத்திடலு மவனுமவ்வா, றப்பொழுதே சென்றந்தப் பதியினெய்தி யத்தீர்த்தந் தனின்மகனை யாட்டுவித்தான், செப்புவதென் னவன்மிடற்றுப் பிணியத்தீர்த்தஞ் சென்றுதோய்ந் திடுமுன்னர்த் தீர்ந்ததன்றே. (கக)

## வேறு.

பணங்கிள ரரவினீங்கும் பணிமதி யென்னவன்றே
னணங்ககன் றின்பமுற்று னஃதறிந் தவனுமூழ்கி
மணிங்குல விதழிசூடு மருதநா யகனைவந்து
வணங்கினான் றுதிகள்கூறி மகனொடு மகிழ்ச்சி யுற்றே. (கஉ)

இன்னலெய் திடிற்றம் மைந்தர் தாமுமவ் வின்னலெய்திப்
பின்னது தீருமாறு பேணலு மதனைத் தீர்த்து
மன்னவர் மகிழத் தாமு மகிழ்தலு மியல்பாந் தந்தை
யன்னையர் தமக்கு மைந்தர் புறத்துல வாவி யன்றே. (க.ங)

மகிழ்விற்றன் னுலகிற் பாதி மருதவா ணனுக்கு நல்கித்
தகைமுடி சூட்டி மைந்தன் றனையவ னகருக் கேவிப்
புகழுமத் தலத்திற் பன்னாட் பொருந்தவீற் றிருந்து பின்னர்ப்
பகலொழின் மதியஞ்சூடும் பரனடி நீழல் சேர்ந்தான். (கச)

உருத்திரதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# பதுமதீர்த்தச் சருக்கம்.

மருவு பின்னிசைத் திரிமதி வாவியின் றென்பா
லருகி னிற்பது பதீர்த்தமென் றுரைக்குள தநற்குப்
பரமன் றேவதை போற்றுதல் பணிமுகக் கணங்கள்
பிரமன் மாமுநி விருக்கமோர் பிறங்கெழில் வில்வம். (க)

ஒல்லு மன்னதிற் படிந்துகாரப் பாசமொப் பில்லா
வெல்ல மூப்புமா தானியம் விப்பிரர்க் குதவி
னல்ல னீங்கிடு மவாக்குறு பகைவர்க ளழிவ
ரல்ல லெய்திடு திருவரும் வளர்தரும் வாணாள். (உ)

மால லித்தனிப் பெயருறு விரோசனன் மைந்தன்
மேவு மத்தடம் படிந்துமுன் வெம்பவ மகறறிச்
சேவு றுங்கொடிச் சேவகன் றிருவரு ளடைந்து
தாவி னூர்த்தொலைத் தாணடனன் சுவர்க்கமும புவியும். (ங)

மருக் குலாவுமப் பதுமநீள் வாவிநீர் வடிவா
யிருக்கி னுந்தனிற் படிந்துளோ ரியற்றுவெம் பாவத்
திருக்கெ னும்விற கினுக்கொரு தீயதா மதனிற்
றெரிக்கு மெண்ணிலர் வினைகளைப் பசுமமாச் செய்தோர். (ச)

ஆண்ட நாதியாய் விளக்கமுற் றமர்ந்திடு பதுமத்
தேண்ட ரும்புகழ்க் கதைசிறி திசைத்தன மினிது
பாண்டு மன்னவன் புதல்வர்கள் பரனடி பணிந்து
காண்ட ருந்தடஞ் சமைத்திடு காதைமேற் கரைவாம். (ரு)

பதுமதீர்த்தச் சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# பாண்டவதீர்த்தச்சருக்கம்.

*இருமனப்பெண் டிருமதி மயக்கிடுந்தன் னுருவ்துவு மிழைகுஞ் சூதுந்
திருமகணீக் கிடப்பட்டார் தொடர்பென்றுன் றோர்கூறறெளிந்துமுழாற்
றருமனுயர் வீமனருச் சுனனகுலன் சகதேவன் சாற்றுமின்னோர்
கருதலரோ டுறுசூதிற் புவியிழந்து கரந்துறையக் காலேதன்னின். (க)

*திருக்குறள், கஉ-ம் அதி, இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

கண்ணனிடை மருதடைந்து கண்ணுதலைத் தொழுமினெனக் கழறக் கேளா, வண்ணமுறு மணியதலத் தடைந்துமையாள் கருணையெழு வாவி மூழ்கித், தண்ணிலவா றணிசடிலத் தனிமருத வாணனடி தாழ்ந்து போற்றி, யெண்ணருமெந் துயர்தீர்ப்ப தென்றெனநின் றிசைத்தனரவ் வேல்லைவ தன்னில். (உ)

இன்னவினை வீடுந்திடுமி னினிமின்னுந் நிலைபகல்பின் னிடனீர் சென்று, துன்னலர்க டமைதகருமச் சமரதனிற் பொருகளத்திற் றொலைத்துப் பன்னூல், மன்னுபுவித் தலம்புரந்து பின்னுயர்நம பதத்தினிது மருவுதிர்க ளென்னமறு திணறவனருள் வாக்கிலகு மிருவிசுபி னெழுந்ததன்றே. ()

அந்தமொழி செவிப்புகலு மைவர்களு மகிழ்ந்துபினு மன்பிற்போற்றிச், சந்தமுறு மணியபதி யிடத்தினிறைபெயரிறைவோர் தடங்கள் செய்து, முந்துறுதந் நடணைந்து பகைவர் பெருங் குலமுழுது முருக்கிவைய, நந்தலில்பூ ருவகையொடும் புரந்ததனபி னணைந்ததில்பத நணணினார்கள்.

பதுமமெனுந் தீர்த்தமதன் றென்புறத்தி லவர்தீர்த்தம் பரத்துவாசர்
முதுதவத்துச் சதுகர்ணர் கௌதமர்மாண் டவிபயிலர் முனிவர்நாவ
விதமுறுமா வாமலக மால்வேயபு தருதெய்வ மீசனந்தி
கதமுறுவேற் குகன்பிருங்கி சண்டேச னின்னவரோ காப்பினேரும். (ங)

மேதகுமத் தடங்களிடைப் படிந்துபுனற் குடங்கவிகை விசிறியாடை
பாதுகையந் தணர்க்குதவி லெண்வகைச்செல் வமுமுளவாம் பகைமை
தீரு, மேதமுறு பிணிதவிரு மிகமணுரர் மடமூழ்கி யின்பமுற்றோர்
புகலத்தி லெண்ணிலாமே லிந்திரதீர்த் தச்சிறப்புப் பகறல்செய்வாம். (ரு)

பாண்டவதீர்த்தச் சருக்கமுற்றும்.

---

உ
சிவமயம்

# இந்திரதீர்த்தச்சருக்கம்

கொந்து றும்மலர்ச் சடையவன் குணதிசை யிடத்தி
லிந்தி ரன்முனஞ் சமைத்திடு தீர்த்தமொன் றிலங்கு
மந்த முன்னமே தேவதை யாமவன் முனிவன்
இந்து சூடிதை காப்பவன் முருமுள் ளிலவு. (க)

ஓது மற்றதிற் படிந்திரும் புடனெளிர் வெள்ளி
மேதி யின்சுவைப் பால்கனி வெள்ளிலை கமுகம்
வேதி யர்க்கினி தளிததிடின் வெவ்வினை யதனோ
டேதஞ் செய்பிணி யகன்றிடு மின்பமே லெய்தும். (உ)

ஆற்று மக்கினிட் டோமத்தி னரும்பல னடையு
மேற்றி கழ்ந்திடு மதிற்படிந் தல்லனோய் விடுத்துச்
சாற்றி டின்பமு மகிமையுஞ் சார்ந்தன ரநேகர்
தோற்ற வாமுத லியதீவிர் தூயமா தவத்தீர். (௩)

என்று சூதமா முனிவர னிசைத்தலு முனிவர்
வென்றி வச்சிரத் தவனிது வேண்டியத் தலத்திற்
சென்று ரைத்திடு தீர்த்தமாங் கியற்றினன் றெரிய
வின்றெ மக்குரை செய்திடு மெனவவ னிசைககும். (ர)

பூச லிற்பொரு களத்திடைத் தனதுயிர் போன்று
நீச னொரிடத் துறுவர மேற்றிடு திறலோன்
பேசு மன்னவன் வலனெனும் பெயரினா னெதிர்த்து
வாச வன்றனோ டமர்செய மற்றவன் றோற்று. (ரு)

இவனை வஞ்சகத் தலைத்திட வேண்டுமென் மெண்ணி
யவனை யுற்றுநீ பொருதிடு மாற்றலகண் டமரி
லுவகை யுற்றன மிகுவரீ முனக்களித் திடுவாங்
குவவு மால்வரைத் தோளினாய் வேண்டுவ கோடி. (சு)

என்ன வோதலு மவனதைந் தெனக்கெதிர் தோற்ற
வுன்னி டத்தினிற் பெறுவதோ வுனக்கியான் றருவன்
மன்ன கேளென நானொரு மகமியற் றிடுகே
னன்ன தற்குறு பசுவதாய் வருகென வறைந்தான். (எ)

சுவ தேபெரி தெனவல னெண்ணிநற் பசுவாய்த்
தாவி லாதவம் மகம்புரி சாலையந் தடைந்தான்
மேவி யிந்திரன் சுருதிசொல் விதிமுறை வதைத்துத்
தேவர் தங்களுக் கூட்டிமேற் செய்தனன் வேள்வி. (அ)

வஞ்ச வனைத்திறத் தலன்றனை வதைத்திடு பவமும்
வெஞ்சி னப்படைப் பகன்றனை வீட்டிய பவமும்
நஞ்செ னகெகாள்த் தலைத்திட நாடொறு மலைவுற்
றஞ்சி யித்துயர்க் கென்னிழைத திடுவதென் றுய்ந்து. (கூ)

மன்னு சீரிடை மருதடைந் தமையருள் வாவி
தன்னின் மூழ்கிநின் மருதநன் னிழலுறை தாணு
பொன்ன டித்துணை பணிந்துதன் பெயர்கொடு புகலத்
துன்னு சீர்த்தட மமைத்தரு வினைகளைத் துடைத்தான். (கo)

அனைய சோதியை யருச்சனை புரிந்தவ னருளு
மனைய மால்வரங் களுங்கொடு பொன்னுல கடைவா

னிணைய வாவியிற் படிந்திவை வேதியர்க் கீவோ
ரிணைய னிக்கிமற் றிவைபெறு மெனவிசைத் தகன்றான். (கக)

கந்த நாண்மலர் மலிதரு கற்பக நிழல்வா
ழிந்தி ரன்றனித் தீர்த்தமான் மியஞ்சிறி திசைத்தாம்
வெந்த றுமபெருங் கடவுடன் பெயர்கொடு விளங்குஞ்
சந்த முற்றிடு வாவியின் பெருமைசாற் றிடுவாம். (கஉ)

இந்திரதீர்த்தச்சருக்கமுற்றும்.

―――――

உ

சிவமயம்.

# அக்கினிதீர்த்தச்சருக்கம்.

சாலு மிந்திர வாவியின் சார்ந்திடு தென்பாற
கோவி ரண்டட னென்றுவிழ் சேய்மையிற் குலவுஞ்
சூல காதமொன் பெருதடந் தோன்றிடு மதன்றன்
பால னக்கினி சங்கரன் பகர்ந்திடு மரட்வம். (க)

மயன்மு தற்பகை மாற்றிடு மாதவன் கபிலன்
பயிலு றுந்தரு மெல்லியத் தடத்தினிற் படிந்து
தயிர்நெய் பாற்பசு மறையவர் தமக்களித் தனனோ
வுயிர்வ தைததிடும் பாதக மொழிந்திடுங் கணத்தில். (உ)

ஆதி யோர்பகல் வயிரவ னாகிய கடவு
ளோது மங்நகர் காவலி னுற்றுலா வருவான்
சோதி முத்தலைக் கைப்படைச் சூலமூ லத்தைப்
பூத லத்தவ ணூட்டிமே லெடுத்தனன போலும். (ஙு)

எடுத்த பள்ளமோர் வாவியா யிலங்கிய தன்றேன்
பிடித்த சூலமங் கமைத்ததாற் பேசுமப் நாம
மடுத்த தப்பெருந் தீர்த்தமா லதனிடைத் தோய்ந்து
தொடுத்த பாவநீத் தலகிலர் தூயரா கினரால். (சு)

பாண்டு வின்மகன் பற்குனன் பரிவுட னுதவு
காண்டவப்பெரு வனத்தினைப் புசித்திடு காலை
யாண்டி ருந்தபல் லுயிர்கள்வெந் தவிநதவெம் பாவம
பூண்ட *பாவகன் மற்றது போக்கிடக் கருதி. (ரு)

---

*பாவகன்=அக்கினிதேவன், சுத்தப்படுத்துவோன் எனபது பொருள்.
[பூ—சுத்தப்படுத்து.]

வளர்ந்த ரும்புக ழுத்தலர் மரீஇவை ரவன்செய்
குளர்ந்த னிற்பழந் தப்பெருங் கொலைப்பவ மகற்றி
யுளங்கொ ளோகையி னத்தட மொளிபெறப் புதுக்கிக்
களப்பொள் கண்டனைப் பணிந்துதன் கவினுலகடைந்தான். (௬)

அனைய னேர்பெறப் புதுக்கலா லக்கினி தீர்த்த
மெனவ நற்கொரு நாமமே யெய்திய திப்பா
லினமல ர்க்குலம் பொலிதரு மியமதீர்த் தத்தின்
கனமு றுந்தனி மான்மியங் கட்டுரைத் திடுவாம். (௭)

அக்கினிதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# இயமதீர்த்தச்சருக்கம்.

பாவக தீர்த்த மேல்பாற் பகழியேழ் படுதூ ரத்தின்
மேவுறு மியம தீர்த்தம் விளம்பிய மன்றவத் தோன்
தேவதை யகோரமூர்த்தி பாதிரி நிகழுந் தாரு
காவல்செய் திடுவா ரங்கு னிரிரிடர் கணங்களாகும். (௧)

திருத்தகு மதனின்மூழ்கித் திலமுட னிரும்பு செம்பொன்
பருத்திகம் பளங்கார் மேதி பகடிவை பனவர் தங்கட்
கருதத்தி னுதவுவோர்கட் கறைதரு மியமன் றன்னால்
வருத்தமீ தின்றுமீண்டும் வளர்நதிடு மவர்தம் வாணாள். (௨)

வேறு.

துன்பி ழைத்திடு குட்டநோய் பித்தநோய் மூலை
யென்பு ருக்கிடு மேகநோயாதிய விரியு
மின்பு கல்விசெல் வம்புக ழெழினனி யெய்தும்
வன்ப கைத்திறம் விளைப்பவர் வணங்குவர் வந்து. (௩)

சபலை நேர்விழி யுமைதவம் புரிந்திடு காலை
யியலு மத்தவச் சாலைதன னாதரோ டியமன்
பயிலுங காவல்செய் திட்டநாட் பகருமவ் வாவி
வியலுறச் சமைத் தாங்கினி திருந்தனன் மேவி. (௪)

(வேறு)

அத்தகைய நெடுந்தீர்த்தத் தென்கரையிற் சிலபகல்பின் னகன்றபின்னர்
முத்தமிழ்த தென் மலயமுனி மருதநிழ லிடதஒளிரு மூர்த்திதன்னைப்
பத்தியிலை யிடைப்படுமெம் பரசிவனை யன்பினொடும் பணிவுற்றேத்தி
மெய்த்தவர்சூழ்ந் திலங்கிடநீ டருந்தவஞ்செய் திடுவதற்கு மேவுற்றானல்.

வேறு.

தருமனுக் கியநனித் தடத்தின் மேன்மையும்
பரசிவ ஞண்டினி திலங்கு பான்மையு
மொருவுகை பேசினு மிமக்கு நாமினி
நிருதிதீர்த்த தத்துறு நிகழ்ச்சி கூறுவாம். (௧௪)

இயமதீர்த்தச்சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்.

# நிருதிதீர்த்தச்சருக்கம்

இயமதீர்த் தத்தினுக் கிலங்கு மேற்றிசை
வயினிரண் டோடொரு வாளி யிழிடைப்
பயிலுறு நிருதியின் றீர்த்தம் பாங்குறும்
மயலறு மாதவன் வசிட்ட னென்பவன். (௧)

நேத்திர நுதல்வளர் நிமலன் றேவதை
கூர்சதும் நிருதியே குலவு மன்னதைக்
காதநிடு நீள்கருங் காலி யென்றிசை
சித்திபெற் றிடுமொரு திசமு மாயிடை. (௨)

மேயதின் மூழ்கிமேல் விளங்கு பூசினிக்
காயுறுந தெனைவெயட் கலந்த போனகந்
தூயவே தியர்க்கிடிற் சுரமுன் னாகிய
நோயகன் றிடுமொரு நொடிப்ப தத்தினே. (௩)

அரக்கரி னலகையி னணுகு மின்னன்மே
னெருக்குறு வினபமே நீடு நாடொறுந்
தருகருது மத்தடந் தன்னின் மூழ்கிமுன்
கருக்குநோய் தவிர்ந்துளங் களிந்து ளார்பலர். (௪)

தரணியி லெளியுறைக் காக்கத் தானவ
ராசனத் தடஞ்சமைந் ததற்கு முன்னிசை
வருணமீந் திட்டனன் மகிழ்ந்து மற்றினி
வருணதீர்த் தம்பெறு வளமை யோதுவாம். (௫)

நிருதிதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்

# வருணதீர்த்தச்சருக்கம்

மருத நாயகன் றனக்குமேற் றிசையினில் வாளி
யொருப ஞைந்துவீ ழெல்லையி னுறையுமோர் தீர்த்தம்
வருண னாக்கிய தஃதவன் பெயரினால் வயங்கு
மிருடி தீண்பரத் துவாசனு மிசைதரு வருளால். (க)

தீர்த்த பாலனைங் கரத்திறோன் றெறிக்குமெய் வுயிர்க்குஞ்
சாத்தி யுப்பொரு ளாயுறு சத்தியோ சாத
மூர்த்தி தேவதை மற்றதின் மூழ்கிவெள் ளடைகா
போர்த்து ரகமே லுதவிடிற் கொடுவினை யேகும். (உ)

பொன்னி ரும்பிர சதங்களிற் பொலிதிரு விசும்பு
தன்னி டைத்திரி திரிபுரங் களிலுறு தகுவர்
முன்ன வன்றரத் தாமபெறு வரத்தரு மொய்ம்பா
றன்னு வானவர்க் கநுதினந் துயரமே விளைத்தார். (ங)

வான நாடவ ரவர்செயுந் துயரினால் வருந்தி
மாநி லம்புக ழிடைமரு தெனும்பதி மருவி
மேன லமபெறக் காகமூழ் கியசட மேவி
நானஞ் செய்துமை யருளினா ரதிலுமப் படிந்து. (ச)

பொன்னி சூழிடை மருதிறை யவனடி போற்றி
யன்ன வன்மல ரடியையே யகத்தினிற் குறியாச்
சொன்ன வருணத் தடத்தினுந் தோய்ந்ததன் கரைமேற்
பன்னு மெய்நடுக் குற்றிடப் பரிந்தன ரிருந்தார். (ரு)

முந்து சத்தியோ சாதமா மூர்த்தியா மிறையோன்
வந்து நின்றெதி ரவரைநீ ரஞ்சன்மின் வலிசெ
யந்த வன்கணர்க் கழிவுநா ளடுத்தது மென்னாச்
சிந்தை தன்னொடு மெய்யுறு நடுக்கமுந் தீர்த்து. (சா)

நேச வன்றிரி புரத்துறு கேடற்பாற் கிடைத்தாண்
டீசன் மாலய னிறைவனொன் றியம்பல்பொய் யென்றவ்
வாசை நீங்கிடப் பலபல மாயஞ்செய் தவர்செய்
பூசை யுஞ்சிவ பத்தியும் போக்கிமுன் வந்து. (எ)

ஈசனின்பதம் விடுத்திலர் மூவர்மற் றியாரு
நேசராயினர் திரிபுரத் திடையென நிகழ்ந்த
வாசகப்பெரும் பணியினை யரவென மாட்டித்
தேசமிக்கபொன் மேருவைச் சிலையெனக் கோட்டி. (௮)

மாயனைக்கணை யாக்கியங் கைக்கொடு மதிநே
டேய செங்கதிர் திகிரியா யிசைமறை பரியாத்
தூய நான்முகன் வலவனாத் துணையுமே தினியா
மேய தேரினின் மெருருதயிச் சிறுநகை விளைத்து. (௯)

அந்த மென்னகை யெழுந்தெழு பொறிகளி னெழுந்து
மூந்து முப்புரந் தீயவு பொடியுமுந் தவரும்
வந்து நின்னடி வணங்கவு செய்தபின் வரோர்
சுந்தரத் தமரியர் கேர் துணையுஞ் செய்தான். (௧௦)

தாரிலங்கணி மூவர்க்குரா தலைமுகற் போற்றிப்
பாரினிமித் தலத்திடைப் பகர்புனற் றிறைசெய்
நீரின் மூழ்கின மிகலிரோர் நெருப்புமூழ் கினவொன்
றேரி னேககதைப் புகழ்ந்துத மிருகையெய் தினரால். (௧௧)

கடுக்கவினைபெறு கரதரங் கண்ணுற பிறைமேபா
ரிடுக்க ணிகழிய திறநிகழ விற்றுமத் தலத்தி
னடுக்கந் திரதசவ னெனச்சொலு நாமமேற் கொளவே
வடுக்கண் மாதிேரு டமர்ந்திடும வணங்கழு வுலகு ர. (௧௨)

தருணவிண்மதி மிலைந்திடை மருதுறை நிலைவன்
கருணையுற்றருள் வரமபெறு செஞ்சகங் களித்து
வருண னாகிய வாவியின் மான்மிய மிதுமே
லருண வாகனன் பிரதமான் மியமினி நுறைவாம். (௧௩)

வருணதீர்த்தச்சருக்கமுற்றும்.

உ

சிவமயம

## வாயுதீர்த்தச்சருக்கம்.

மேய வாருணர் தடவட மேற்றிசை யிடத்தோர்
சாய கமலிரூ சேய்மையிற் றடங்தமோர் தீர்த்தம்
வாயு தீர்த்தமென் றதறிகை வாயுவே தெய்வஞ்
சேய தைப்புரந் திடுமுநி திறங்கொள்கண் ணுவனும் (௧)

கேச ரத்தனித் தருவொன்று செழுமலர் கொண்டு
வாசஞ் செய்திடு மாவயின் மற்றதினை மூழ்கி
யாசில் கன்னிகைக் கவினைப்பொன் னந்தணர்க் குதவிற்
பேசும் வாயுநோ யகலுமே வின்பமும் பெருகும். (௨)

ஒளிரு மத்தடந் தன்னிற்படிந் தூயகதி யடைந்தோ
ரளவி லாரவர் தமிலொரு வனைறனை யறைதுங்
கிளரும் விப்பிர குலத்திலேன் ஞிருகலப் பெயரோன்
களவு கைதவம் பழுதிவை யளவில கற்றோன. (௩)

அந்த ணாளர்பாற் பயிலுரு வருமறை யறையான்
மந்தி ரப்பெரு மயலினும் வடுவகிர் நெடுங்கட்
கந்த மென்மல ரோதியர் காயவே லையினுஞ்
சந்த தம்படி மனத்தொடு சரிப்பவ னொருவன். (௪)

வந்து சதசமா முநித்தலத் திடைநகரி மதியி
லிந்து வாரநா ளிரவினி லீசமாமி நிலவுறுஞ்
சந்த நீள்பணி கவர்ந்திடச் சார்ந்தது தெரிவா
னந்த தீபத்தைத் தூண்டிமேற் கொண்டன னடந்தான். (௫)

நடக்கும் போதினி லியமகிங் கரர்சிலர் நண்ணி
யடுத்தி டங்கொரு பணியெயிற் றமர்தருங் கொடிய
விடத்த வனைறனைக் கொண்டுபோய் விளங்குசூழ் றவன்பால்
விடுத்து நின்றன ரன்னவ ருய்ந்திது விளம்பும். (௬)

தராத லத்திடைப் பனவநீ யழைத்தபா தகத்தாற
கிராத னுவுதித் தெழுமுநித் தலத்தினிற் கிடைத்தங்
கிராவி லிந்துநா ளீசன்முன் னிருந்திடு சுடர்வில்
விராவு நீட்டலா லிடைமரு தெனுமபதி மேவி (௭)

அனில னுக்கிய வாவியிற் படிந்துமற் றனைய
புனித வாவியிற் படிந்திடு புண்ணிய வதத்தாற்
பனிம திச்சடை நுதல்விழிப் பரம்பொரு ளுலகத்
தினிதி ருஞ்சுக மெய்துவான் பிறத்திபோ வென்றான். (௮)

அவனு மததிறற் கூற்றுவ னறைந்தவா றீண்டுச்
சவர னுவுதித் திடைமரு தெனும்பதி சார்ந்து
தவல ருமபுகழ் மருத்தெழிற தடத்தினிற றோய்ந்து
சிவப ரன்றனி யுலகிடைச் சென்றுவீற் றிருந்தான். (௯)

தண்மி குந்திடு மலர்பொலி *சமீரண தீர்த்த
வளமை மற்றிஃ தாமினி மகிழ்வுறு தவத்தீர்
களமி டற்றவன் றுணைவனாங் கட்டுரைத் திடுதென்
னளகை மன்னவ னமைத்ததீர்த் தப்புக ழிறைவாம். (௪0)

வாயுதீர்த்தச்சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்.

# குபேரதீர்த்தச் சருக்கம்.

தீர்த்த முற்றிடும் வாயுவின் றீர்த்தமென் றதற்கே
கூர்க்க டுங்கணை யைந்துசெல் சேட்மையிற் குணபாற்
றார்க்க வின்முடி நிதிபதி சமைத்திடு தீர்த்த
மார்க்க டேயனு முனிவரன் மறைபகற் கிருடி. (௧)

கொண்ட புட்பக வூர்தியே குலவதின் றெய்வங்
கண்டை யுற்றகண் டாகர்ண னன்னதைக் காப்போன்
வண்டு ணுமலர்ச் சண்பக மதிலுறு விருக்க
மண்டு வெள்வளை யுலவுமவ் வாவியின் மூழ்கி. (௨)

வேத மாகம மாதிய வுணர்ந்தவிப் பிரர்க்கு
மோத கங்கழை சருக்கரை மொழிதரு சுகந்தங்
கோது மைக்குலங் கொடுத்திடிற் குலமென னவர்க
ளோது தீவினை குறைந்திடு முயர்ந்திடுஞ் செல்வம். (௩)

அத்த டத்தினை யமைத்துவெவ் வினைதவி ரருத்த
னித்தி றப்பெருஞ் செல்வமுற் றிடவிடை மருதி
னித்த னைப்பணிந் துறுவர மேற்றனன் வீர்தோய்
மெய்த்த வர்க்குத வௌவதற் குதவினன் மேனாள். (௪)

மேவு மத்தடந் தனிற்படிந் தித்திறம் வெய்ய
பாவ நீக்கிநற் செல்வமேற் பற்றின ரநேகர்
சேவு கைத்திடு சானனுந் தேவனு மமைந்த
வாவி யின்றனிச் சிறப்பினி வழுத்தற்ற மன்றோ. (௫)

குபேரதீர்த்தச்சருக்க முற்றும்.

---

*சமீரணன் = வாயு. நன்றாய்ச்செல்கின்றவன் என்பது பொருள்.
[சம் = நன்றாக, ஈர் = போ, செல்.]

உ

சிவமயம்.

# ஈசானதீர்த்தச்சருக்கம்

இலிக்கர் நாயக னமைத்திடவ் விலஞ்சியின் கீழ்பால்
யசக டெங்களை யிரண்டிலீ சானன்முன் வகுத்த
வியக்கு றந்தவிய பொற்றட மேவுறு மிருடி
மயகின் மாதவ வசிட்டனும் வார்தரு விளவே. (௧)

மாணி பத்திர னென்பவன் மற்றதைப் புரப்போன்
முணு வென்றல் லிசைத்திடு சங்கரா னெய்வங்
காண னிறபடிந் திருத்திரங் கண்மணி கலைகள்
சேண னிதத்திடின் மகவுறும ஞான்முஞ் சேரும். (௨)

மேலை டன்னதிற் படிந்தெழில் மிருகண்டு மைந்தன்
சூல பாணியை யனையபொற் பதியிடைத் தொழுது
கால னென்பவன் றனைப்புகழ்க கடவையில் வென்று
சால வின்புறா வாழுநா ளெய்தினன் றனித்து. (௩)

உரிய வனபினம் மறையவ னிதிற்படிந் துலகிற்
பெரிது வாழ்பக லெய்தின னென்பது பெரிதோ
வரிய ஞானமோன றெய்திடு மௌனச்சொலி னதனாற்
சரிய கந்தரன் றிருவருள கலந்திடு மன்றே. (௪)

இன்று மாதடந் தனிற்படிந் திடைமரு திறையோன்
பொன்னன டித்துணை பணிந்தரு ளெய்தியிப புடவி
தன்னி டைபல யுகமுறச் சித்திசார்ந் தவரு
மன்று விதபெற் றவாகளும் வரையில ரன்றே. (௫)

ஈச றுற்றிய வாவியின் மான்மிய மிதுவாம்
யாசி லந்தணி னியவன் மலரடி வணங்கி
வாக தேவனென் றுரைத்திடு மாதவ னமைத்த
தேசு மிக்கதீர்த் தக்கதை சிறிதெடுத் திசைப்பாம். (௬)

ஈசானதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# திருவெள்ளைகூபச்சருக்கம்.

ஆடயத்தினி லீசதிக் கதனிடைக் கண்ணன்
மேலை யதகலத் தெதிர்ந்தநாள் விளைத்ததோர் தீர்த்தங்
கோல முற்றினி திலகிடுங் கூபநீ டுருவாய்ப்
பாலி னட்டமி தனிலதிற் படிதலுத் தமமால். (க)

தரிக்கு மன்னதிற் பரிவொடு தானமுன் னியற்றிற்
றெரிக்கும் வெவ்வினைக் கணத்தொடு னிரணமுந் தீரும்.
வரிக்கண் மாதுறும் மகவுறு மதியின நிலவு
விரிக்கு மின்சடைத் தனிமுதல் கருணையு மாவும். (உ)

தான வர்க்கிறை யாகிய மாவலி யன்பாற்
றான மூன்றடி தருகெனத் தகையரி வேள்விச்
சான மெய்திடுந் திறந்திடப் * பார்க்கவன் றனித்துத்
தான வற்கியற் றுரவுறுந் தன்மையாற் சார்ந்து. (ந)

மேவு வஞ்சமி தெனக்கொடா வகையெதிர் விலக்க
மாவ லிப்பெயர் மானவன் வந்திரந் தவர்கட்
கீவ தேபெரி தெனவுளா தளிப்பதற் கிசையக்
† காவி யன்பினர் மேனெறி யாதெனக் கருதி. (ச)

பொழிக ரும்புனற் கமண்டலச் சிறுதுளை புகுந்துள்
ளழிய டைத்தனன் வாமனன் மற்றதை யறிந்தவ்
வழியி னேர்படுந் தருப்பையிற் குத்திட வொளியோன்
விழியி னொன்றிடைப் பட்டது வியன்மணி சிதற. (ரு)

ஆங்க வன்றுய வொருமுகம் பெயர்த்தன னதனிற்
றாங்கு தணபுனல் விடுத்தவன் சொன்னவா றளித்தான்
வோங்கி மாயவ னற்றலைசௌ மலர்ப்பதங் கொடுத்தா
னீங்கு வெள்ளியின் னேகநேத் திரத்தொடு நின்றான். (சு)

ஈதல் வேண்டும்வந் திரந்தவர்க் கிசைந்தன விலையே
லோதல் வேண்டுமற் றொருவருக் குதவுமா றின்றேல்
யாது மோதுறு திருந்திட வேண்டுமென் றீதல்
பேத முற்றிடச் செய்பவர் பிணியுறல் வியப்போ. (எ)

* பார்க்கவன் = சுக்கிரன். பிருகுவின் சந்ததியிற் பிறந்தோன்.

† காவியன் = சுக்கிரன். கவியினது புத்திரன்.

கொடுக்கு மானவ னின்பமேற் கூடிடு முன்ன
ரிடுக்க ணெய்தினு மதனொடு புகழுமொன் றெய்துந்
தடுக்கி ளூர்க்கொரு புன்கணுஞ் சாற்றிடு வசையு
மடுக்கு மென்பதம் மாவலி சவிகள்பா லறிந்தாம். (௯)

நின்ற வெள்ளிபொன் னிடைமரு தெனும்பதி நேர்ந்து
துன்ற சீருறக் கூவனீர் தோய்ந்துடன் பெற்றான்
சென்ற கண்மணி பிறர்களில் வனீதலைச் சிதைத்தோ
னென்று காட்டிலச் சிலையின்முன் போலவே யிலங்கும். (௯)

பாவு மோங்கயி னுமையொடு மருதுறு பாங்கின்
மேவு சோதியைத் தன்னிரு விழியினு நோக்கித்
தூவி யொண்மலர் பணிந்தெதிர் துதிபல விசைத்துத்
தேவர் தங்களுக் கின்னல்செய் தீவினை தீர்ந்து. (௧௦)

தன தெழிற்றனி யுலகிடைச் சார்ந்தனன் றயங்கு
மனைய தீர்த்தமான் மியஞ்சொலற் கநேகமுண் டின்னுஞ்
சினவு மால்விடைந் தாணுவின் றிருவிழி யமைத்த
கனக தீர்த்தமான் மியமினிக் கட்டுரைத் திடுவாம். (௧௧)

கிருஷ்ணகூபச்சருக்க முற்றும்.

---

௭

சிவமயம்.

# கனகதீர்த்தச் சருக்கம்.

மாக விண்மதி சூடிகண் வந்தபொற் றீர்த்தங்
கான தீர்த்தமென் றுரைபது காகமுன் மூழ்கி
யேக நாயகன் றிருவரு ளெய்திய தூலைக்கிற்
பாரு றன்னதை நோக்கிடிற் பழவினை பறியும். (௧)

அங்கை யாலதைத் தொடின்வினை யாவையு மகலுந்
தங்கி டன்னதி லொருதுளி தலைமிசைத் தெளிப்பிற்
பொங்கு வேள்வியைந் திரட்டியா யிரப்பலன் பொருந்து
மங்கு வெம்பிணி தொலைவுறு முளவுறுஞ் செல்வம். (௨)

துங்க முற்றிடு மதனிடைத் தோய்ந்திடு மவர்க
ளிங்கி தம்பெறக் குறித்தவை யாவையு மெய்தித்
திங்கள் சூடிய சிவனுருப் பெறுவர்மேற் றெரிக்கும்
பங்கு னிக்கண்முன் னாதிற படிந்திடல் விசேடம். (௩)

கொடிய தாகிய வொருகோடி குலவதி னெய்திப்
படிதல் செய்துபொன் னுருவதாய்ப் பரனுரு வாகி
நெடிய பொற்குவட் டிரசத நிலவுவெண் கயிலை
முடிபு குந்தநாம் பிறர்சிலர் கொடுமைதீர்ந் ததுவும். (௪)

முன்னர் நீவிர்நன் குணர்ந்திட மொழிதலுற் றனமா
லின்னு மன்னதி லெண்ணிலர் படிந்துநீ டின்பந்
துன்னி னார்களச் செய்கையுந் தோன்றுமி யறைதும்
பின்ன ரீண்டினிக் கங்கையின் பெருமைபே சிடுவாம். (௫)

கனகதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# கங்காகூபச் சருக்கம்

கந்தவே ளருளாற் கூபம தாகிக் கண்ணுதற் கீசதிக் கிலங்குஞ்
சுந்தரத் தீர்த்த மதனிடை யிறையோ னருளினாற் றூயநீர்க் கங்கை
சந்தத முறைய மதனைநோக் கிடினுந் தடங்கையிற பரிசனஞ் செயினு
முந்திய கோடி கொடுவினை மூழ்கு மூழ்கிடின் வினைபடலா முடியும. (க)

மருவிடு மதனின் மூழ்கியந் தணர்க்கு வளர்சிவ லிங்கநீள் சிவிகை
யிரதம் வெண்கவிகை யிரசதங் கனக மிசைந்தவை யுதவின ரொன்னிற்
பரவுமிவ் வுலகிற் பகைகளை யொடுக்கிப் பகருமெவ் வினபமு மணைந்து
விரிபசுங் கதிர்வெண் பிறைகொள்செஞ் சடில விமலனுஞ் பதமுமே
வுறுவார். (உ)

உத்தம மாகு மனையதீர்த் தத்தி னுத்தர திக்கினி லுறைய
மத்தநா ரீசன் விபண்டக முனிவ னனலிதன் றிசையுறுங் குணபான்
முத்தலைப் படைக்கை வயிரவ னுறைய மொழிதரு நிருதிதன திசையின்
மெய்த்தகைப் பிரமன் காவலாய் வதியும் மேற்றிசை யிடைமருதிலங்கும்.

சாற்றதன் மருங்கு பிதிர்களுக் கொருகாற் றருப்பண மிழைத்திடி
னதைத்தொண் ணூற்றறு தினத்துங் காசியென் றினிது நுவல்படரும்
பதிக்கணுற் றியதா, யேற்றுள மகிழ்வ ரனையரன் னதன்பா லிருந்துநூற்
றைந்தெழுத் தோதிற், பாற்றிகழ் பதிக்க ணயிரங் கோடி பரிந்திசைத்
திடுபலன் மேவும். (௩)

அத்தகைத் தீர்த்தந் தனையெடுத் தாடி யலகிலர் கொடுவினை தொலை
த்து, நித்தனீ டருளு மடைந்தன ரனைய நிகழ்ச்சியு மளவினிற் சொலு
து, மெய்த்தவத் தீரிங் குறுதியாய்க் கேண்மின் விளங்கிடு கருடதீர்த் தா
திப், பத்துவண் டீர்த்தத் திடங்களுஞ் சிறப்பும் பகருவன் றொகைப்பட
வினிது. (௫)

கங்காகூபச்சருக்க முற்றும்.

சிவமயம்.

# கருடதீர்த்தச் சருக்கம்.

இரு டருங்கள மருத்நா யகன்றனக் கெதிரோ
மரு ட்விர்த்தினி தொருதடஞ் சேய்மையின் மன்னுந்
தெரு டருந்தனி யத்தலத தநாதியாய்த் திகழுங்
கருட னன்னதின் மூழ்கிமேற் கருதிய தடைந்தான். (க)

பின்னு மெண்ணிலர் மூழ்கிமுன் பெரிதுறு நோய்க
ளின்னல் யாவையு நீக்கிமே லின்பநீ டுற்று
ரன்ன வன்பெருஞ் சிறப்பினு லவன்பெய ரடைந்த
தென்ன டைந்தனன் மூழ்கிமற் றவனெனி னிசைப்பாம். (உ)

தக்க னீன்றருள் புதல்விய ரெண்ணிலர் தம்முண்
மிக்க காசிபன் மணந்திடு விநதை கத்துருவாக
தொக்க பேருறு மிருவருந் துலங்குமோ ரிடத்தி
லொக்க வுறுதிருந் துலகியல் பேசிடுங் காலை. (ஙு)

கனக நாட்டின னிவுளிவால் வெளிதெனக் கவின்கொள்
விநதை யோர்ந்தன ளுரைத்திட மேலது கரிய
தென வுரைத்தனள் கத்துரு விதற்கு மாறாகி
னினிதி னேவல்செய் திடுவதீண் டிளைத்தவ ரென்றார். (ச)

அந்த வஞ்சினம் புதல்வராம் பணிகளுக் கறைந்தாண்
முந்து கத்துரு பணிகளி னென்றுபோய் முடுகிச்
சிந்தி வல்விட மவ்வுநைக் கரியதாச் செய்து
வந்த தன்னவள் விநதையைக் வருதிகா ணென்றாள். (ரு)

சென்று பார்த்தனர் கரியதா யிருந்தது திகைத்து
நின்ற வாணுதல் விநதையை மற்றவ ணீமேற்
றுன்று மேவல்செய் திடுகெனச் சொல்லின ளிசைவுற்
றன்று தொட்டவட் கேவல்செய் தொழிலினி னமர்ந்தாள். (சா)

அறவு மெய்யிளைத் திட்டதை யனையள்கா தலனும்
பறவை நாயக னென்னென வினவினன் பணிசெய்
குறையி லென்றதன் வகையெலாங் கூறினள் குறுகிச்
சீறிய தாயினைக் கருடனென் பவனிது தெரிக்கும். (எ)

முன்னு தித்தவ ளேவல்செய் திடுவது முறையன்
றென்ன வோதின னவளிது பணிகளுக் கிசைந்தாள்
பன்ன கங்கள்வா னமிர்தெமக் குதவிடிற் பரிவி
னன்னை யேவல்செய் வினையினை விடுகென வுரைந்த. (அ)

ஒல்லு மவ்வுரை கருடனுக் கன்னவ ளுரைக்க
நல்ல தென்றவ னிசைந்தவந் தகத்தினு ளோடிச்
செல்வ மோங்கிய விடைமரு தெனும்பதி சேர்ந்து
சொல்லி டத்தனிச் சிறப்புறு வாவியிற் றோய்ந்து. (௯)

பணைமு லைக்கொடிப் பாகனை வலங்கொடு பணிந்து
தணிவி லன்பொடு துதித்துவா னுலகினைச் சார்ந்து
துணிவொ டியாவரு மணுகுறு வகையெதிர் சுழலுந்
திணிய சக்கரத் தகப்படா தணுவெனச் சென்று. (௧௰)

உண்ணு மைந்துமெல் லெனவவ ணுறைந்திடு மமிர்த
வண்ண வொண்மணிக் குடந்தனைக் கைக்கொடு வருங்கால்
விண்ணு ளாரறிந் தெதிரும வெஞ்சமர் விளைக்க
வெண்ணு மன்னவர் தம்மைவென் கண்டன னேக. (௧௧)

துன்னி மற்றவர் சூழ்ந்துபின் றுதித்திட முன்னர்ப்
பன்ன கங்களுக் கிசைத்தசொற் பழுதுறா துதவி
யன்னை யேவலை மாற்றுவ னுங்குநீ ரடைவுற்
றின்ன தைக்கொடு சென்மினென் றிசைத்தவ னெய்தி.

ஓத ராவினங் கட்குமக் கமுதுகொண் டுற்றேன்
சீத நீர்படீஇத் தொடுகெனத் தெரித்தொரு தருப்பை
மீது வைத்தனை யேவலை மீட்டனன் சென்று
ளோத ரத்தவை மூழ்குமுன் சுரர்கள்கொண் டகன்றார். (௧௩)

வந்து பார்த்தன திகைத்தன மணிக்குட மிருந்த
நந்த வில்லதோர் தருப்பையை நக்கின விருப்பான்
முந்து நாவிரு பிளவுறப் பிளந்தன முழுதுஞ்
சிந்தை நொந்தன சென்றன சீறுமப் பணிகள். (௧௪)

பொருந்து மித்திற முனிவிர்காள் பூருவ முமக்குந்
தெரிந்த தேயமிர் தெடுத்தவன் வந்திடு திறனும்
வருந்து தாயினை மீட்டதூஉ மருவுறு மனைய
பரந்த வாவியிற் படிந்திடு பயனென லாகும். (௧௫)

இசைக்குந் தென்றிசைக் கோணுறு தீர்த்தத்தி னீச
திசைக் கணுவிரு வசுக்களின் றீர்த்தமொன் றினிது

வசிக்கு மற்றதின் வளர்பிறை யட்டமி மருவி
யசைசகு மனமொடு படிந்தவர் வேண்டிய தடைவார். (கசு)

விரவுறும் வசுதீர்த்தத்தின் விளம்பு முத்தர த்தி
னிரவி தீர்த்த மொன்றிலங்கிடு மிதனின் மற்றனையோன்
பரவு வார நாளவனெழு கலையிற் படியின்
மருவு தீப்பிணி யானவையு மாய்ந்திடு மன்றே. (கஎ)

மன்னு மாதவன் றட்டயன் மருத்து கடீர்த்த
மன்னு தேரங்கிடு வாதநோ யகற்றிடு மதனின்
முன்ன ரமமருத் துக்கள்போய் மூழ்கிநீள் கருவிற்
பொன்னி லத்திறை குறையுடல் பூரண முற்றார். (கஅ)

வட்ட வாருண வாவியின் றென்புடை வயங்குஞ்
சிட்டர் போற்றிடு நரசிங்க தீர்த்தமொன் றதனைத்
தொட்டு வந்துடன் குட்டநோய் தொலைத்தன ரநேகர்
கட்டு மைப்பதென் மூழ்கினோர் கலந்த பேரின்பம். (கக)

அந்த வாருண வாவியின் குணதிசை யமர்ந்து
நந்தி தீர்த்தம வந்தாடினோர்க் களித்திடு ஞானஞ்
சந்த நீடதின குடக்கினிற் றுரோணன் செய்தடாகம
முந்த வன்றினக் கீந்தது மொழிந்திடு மதலை. (உ0)

இராவ ணன்றன் மீதேகு நாளிராகவக் குரிசில்
விராவு மன்புட னுமையவள் மேவுசந் நிதிக்கட்
டரா தலம் பணிந்தேத்திடச் சமைத்ததோர் கூபம்
பராவு தன்வயிற் படிந்தவர் பகைமை தீர்த்திலங்கும். (உக)

வருண தீர்த்த வுத்தரத்தனில் வாளிமூ வாறில்
வரமுறுஞ் சுரதீர்த்த மொன் றிலங்கிடு மருதப்
பரமன் றென்புடை யுலகெலாம் பகர்முனி தீர்த்தம்
விரவு மொன்றிவை யிரண்டுமேல் விமலன் றுளுதவும். (உஉ)

கூறிடும் முரகாரி தீர்த்தாதி யாக் குலவு
மாறு நாலும்வெம் புவத்தொடு துயரமு மகற்றும்
மாறில் செல்வமீண் டுதவிடு மன்னியா டினர்கட்
கீறில் சீருறுக்ச் சபதீர்த்த மேலிசைப் பாம். (உங)

கருடதீர்த்தாதிச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# கச்சபதீர்த்தச் சருக்கம்.

விலையிலா மணிக்குல முறுசைய மால்வெற்பின்
மலைய மாதவன கமண்டல வயிற்றினின் றெழிற்கு
வலைய மேற்குண திசைககொடு மகரநீ டுலவு
மலையி னுறற பொன்னியிற் சிலதீர்த்த முண்டாங்கு. (௧)

சந்த முற்றிடக் காவிரி வாரணந் தாங்கிச்
சுந்தரந் திகழ ரம்பைகள் சூழ்வுறப் புலவோர்
வந்திறைஞ்ச வச்சிர மெடுத்தே கலின் வானாட்
டிந்திரன் றனக்கிணை யெனப்புவி யிடையி லங்கும். (௨)

பெருமை மேவிததென் கீழ்த்திசை யடைந்து மேற்பிறங்கல்
விரவு சோதி கணனுற்றொரு பூதமாய் வெந்தீப்
பொருவுந் தன்னிடத் தடைந்துளோர கொடுவினை போக்கி
யுரமுறும் பகரேந்தி கலியமனை யுறழும். (௩)

பொருவில் காருருக்கொடு நிசியலை யுறப் போந்து
நிருதியாகி மீளிவந்து வாருண முறநிலவி
மருவுபாசி யெனறிடல் கொடு வருணனாய் மண்மே
லருண மூர்ந்துயிர்க் குயிரதாய னிலமா யோங்கும். (௪)

ஈசன்றன் பதிமருங்கி னுற்றுயர் தன மெய்தி
பேசலுற்றிடு மளகையோன் புரைதரும பெரிது
வாச நீடபூ கணிந்து காமதகன் நிரப்பித்
தேசின் மிக்கவீ சானனிற் சிறந்திடு மன்னோ. (௫)

துன்னினார் தமக்க சோகத்தோ டஞ்சுகந் தோன்ற
மன்னிவேங்கை நீடிபங்கொடு குறிஞ்சியாய் வழிக்கோள்
பன்னிசெம் பொருள் பறித்து மேல்விடலையும் பறித்துக்
கன்னியர் தரித்தோதிடு பாலையைக் கடுக்கும். (௬)

மால டைந்துசிற் றிடைச்சியர் பயின்றுமான் மருவிக்
கோல முற்றிடு கலுழியும் பூவையுங் கூடி
யேலு முல்லைதா மனைவயல் வஞ்சிநீ டிலஞ்சி
பாலி சைந்தருச் சுனமுறு மருதமாப் படரும். (௭)

கடலை ணைந்துழுத் தரும்பிடு கடிமலர்ப் புன்னை
மடல் விரித்தெழு கேதகை பட்டின மருவித்
தடமி சைந்திடு நெய்தலாய்த் தயங்கிடு மினைய
புடவி மீதுளோர்க் கமுதமாய் விளங்குமப் பொன்னி. (௮)

கலை யறிந்தன மேற்கொடு கலைமக ளாகி
மல ரணிந்துவுண் டிகிரிசங் கேந்திமே லவன்முற்
றில கெழிற்றிரு வாகிவெற் பிடத்தினிற் றோன்றி
யல கினீடறம் விளக்கலி னமபிகை நிகர்க்கும். (௯)

புனைமு மண்மினை லியாவையும புகல்பர னுருவாய்த்
தனையொந் தோங்கிடு காவிரி தடத்திற்றவழ் காற்றுங்
கனையர் மேற்படிந் திடினுபபட் டேகிடுங் காலை
யனையர் வெம்பவ மனைத்து மேற்றகன்றிடு மன்றே. (௰)

போற்று காவிரி பொருந்துகால் பொருந்திவெம் பவங்கண்
மாற்று மேலதை நோக்கினோர் மலர்க்கைதீண் டினர்க
டோற்ற திற்படிந் துளோர்பவந் தொலைவுறு மென்னச்
சாற்ற வேண்டுமே யவர் தரிசனத்தினுஞ் செலுமால். (௧௧)

பன்னு கங்கையின் மூன்றுநாட் படிந்திட யமுனை
தன்னி லைந்துநாட் டோய்ந்திடத் தணந்திடுமே பாவ
முன்னு காவிரி யொருதின மூழ்கிடி லகற்றும்
பின்னு மவ்வுட லளவுசெய் பிறங்குவெம் பவமும். (௧௨)

வன்ப கைப்பிணி தவிர்த்திடு மருவுமெய்ஞ் ஞான
மின்ப மெய்திடுந் திலத்துட னப்புன லேற்றுத்
தென்பு லத்தவர்க் குதவிடிற் றிகழுவா மரபிற்
றுன்ப மார்நிரை யத்துளோ ரடைகுவர் சுவர்க்கம். (௧௩)

இலங்குகாள் சையமா தியவிட மெவற்றினு மிசைத்த
பயனு றத்தரு மவற்றினிற் பகருமா னைக்கா
மயி லகற்றுமை யாறுதென் குடந்தையொண் மருதூர்
வியனு றும்புகழ் மயிலையா தியதலம் விசேடம். (௧௪)

கூறி டுந்துலா மதியினிற் கூடிநீ டுறுபத
தாறு கோடிதீர்த் தங்களும் பொன்னியி னமரும்
மாறி லம்மதி யன்னதின் மருவியா டினர்க
ளேறு வறுமெலாஞ் சென்று தோய்பயனதூஉஞ் சேர்வர். (௧௫)

உந்த மார்தொடைக் கவேரன்றன் கன்னிகை யாகிச்
சிந்து மன்னவன் றனக்கொரு துணைவியாய்த் தெரிக்கு
மிந்த வையகத் துயிர்களுக் கன்னையா யிலங்கு
மந்த மந்நதி மான்மிய மநேகமுண் டின்னும். (கசு)

மேவு மந்நதி தனில்வட புறந்தனில் விளங்குந்
தாவில் கச்சப தீர்த்தமாந் தனித்துறை யதற்கு
மாவி லங்கிடு தருமுநி மருவுகச் சபனே
காவ லன்புகழ் வீரபத் திரனெனுங் கடவுள். (கஎ)

வாம தேவனங் கதற்கிசை தேவதை வயங்கக்
காமர் வண்டுறை மூழ்கியெட் கலந்தபோ னசநற்
றூம முற்றிடு சிவிகை தானியந்தரு தகையோர்
பூமி காவல்செய் திடுவர்மேற் கொடுவினை போக்கி. (கஅ)

அவமில் சீருறு கச்சப னத்துறை மருங்குத்
தவமி யற்றினன் சிலபகல் பிறைமதிச் சடையோ
னுவமை யில்லதோர் வாமதே வதரனி யுருவோ
டவ ணுதித்தன னெரிடத் தலகிலா தவரின். (கக)

ஆன்ற மாதவன் பணிந்தெழுந் தேத்திட னமல
னேன்ற நீபெறு வரங்களென் னெனறன னையோன்
வான் றயங்குனை யநுதினம வணங்கநா னிறைவ
தோன்று மிவ்விடங் கொண்டுறைந் தருள்கெனச் சொன்னான்.

தாது லாமலர்க் கூந்தன்மால் வரைக்கொடி தன்னோ
டாதி நாயக னத்திற னண்டினி துறைந்தான்
மாத வத்தனு மனமகிழ்ந் துறைந்தனன் வைகு
மேது கொண்டவன் பெரியனு லத்துறை யிலங்கும். (உ0)

பேசு மத்துறை படிந்தவண் பெரிதுகந் துறையு
மீச னைப்பணிந் தளவில ரின்பமீ டுற்றார்
மாசின் மாதவக் கவுதம முனிவரன் மகிழ்ந்து
வாச முற்றிடு தடந்துறை வளமினிப் புகல்வாம். (உஉ)

கச்சபதீர்த்தச்சருக்க முற்றும்.



உ

சிவமயம்.

# கௌதமதீர்த்தச் சருக்கம்.

தோற்று கச்சப தீர்த்தத் துறைக்குமேற்
காற்றல் சாலு மகேணை யொன்றினிற்
றேற்றுங் கோதம தீர்த்தத் துறையொன்று
போற்று மாங்கதைப் போற்றுசண் டேசனே. (க)

கட்டு ரைத்த கவிதம னாகிய
சிட்ட னுங்குறுஞ் சென்றுதி னுடியே
விட்டி டிற்புவி கோதனும் வேதியர்க்
கிட்ட மாமனத் தெண்ணிய வெய்துவார். (உ)

வடங்கொள் கொங்கை யகலிகை மற்றதிற்
படிந்த புண்ணியத் தாலோர் பவத்தினாற்
றிடங்கொள் சாபச் சிலையுருப் போக்கியுற்
றடைந்த னள்கண வன்றனை யாதிநாள். (ங)

இன்னு மெண்ணில ரேந்துமப் பூந்துறை
தன்னின் மூழ்கித் தரணி புகழ்ந்திட
மன்ன ராகி மகிழ்வோ டிருந்துபின்
பொன்னி லத்திற் புலவர்க ளாயினர். (ச)

ஆற்றல் சாலு மருந்தவக் கோதமன்
போற்றி டுந்துறை மாண்பு புகன்றனஞ்
சாற்றி டொண்புகழ் சாருல கெங்கணுந்
தோற்று பூசத் துறை வளங் கூறுவாம். (ரு)

கௌதமதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# கல்யாணதீர்த்தச் சருக்கம்.

காவிரித்தென் புறமதனிற் கல்யாண தீர்த்தமதைக் காப்போ னந்தி
தேவதைநம் மருதீசன் முனிவனுரோ மசனாசு தெரிக்கு மூலு [யென்ப
மேவிரண்டோ டொன்றுறுசேய்த் தத்துறையின் குணக்குமேற் கெல்லை
மேவதனிற் படிவற்கு நினைந்தெழுமுன் சிலவினைகள் விட்டுநீங்கும். (க)

பரவுமந்தத் துறையிலறிந் தேனுமறி யாதேனும் படியினோர்காற்
பிரமகத்தி முதலான கொடுவினைக ளுடனகலும் பிணியினீங்குங்
கரமதனாற் பசுவொடுபொன் முதலியவே தியர்க்களித்தோர் கயிலைசேர்வர்
திரமுறுமஞ் செழுத்தினையங்கிருந்துவிதிப்படியுரைப்போர் சிவனேயாவர்

கின்னரர்கள் கிம்புருட ரியக்கரிராக் கதரசுரர் கிளைகொள்வானோர்
பன்னகர்பா ரிடத்தலைவர் கந்தருவர் தவமுனிவர் பயிலுஞ்சித்தர்
பின்னுமுறு மனிதரொடு பிறர்களுமத் துறைப்படிந்து பெரிதுமாங்கே
நன்னியம முடித்திறையோன் பதம்பணிந்து மகிழ்வுறுவர் நாளுமன்றே.

வளந்தருமத் துறைபடிதற் கநுதினமும் விசேடமதா மதியின்வார
மளந்திடுமன் னவற்றதிக மதற்கதிக மதிமுதனா ளதற்குமேலாய்த்
தெளிந்ததுநீ டமாவாசை யதற்கதிக மெனலாகுஞ் சிறுதிக்கொள்
விளங்குமிரு சுடர்தொடுநா ளவற்றினுக்குந் தைப்பூசம் விசேடமாகும்.

பூசமதிற் படிந்திடுதல் விசேடமதா லத்துறைக்குப் புகலுநாமந்
தேசமுழு வதும்பூசத் துறையென்ன வெவ்வுயிருஞ் சென்றுமூழ்கி
மாசுறுதீ வினையகற்றிப் பரனருளாற் பேரின்ப மருவலாலே
பேசலுறுங் கல்யாண தீர்த்தமென வொருநாமம் பெரிதுமன்றே. (ரு)

இடமுறுகார்க் கோடனெழிற் பரிச்சித்து தனைகடித்த தீமையந்தத் [தி
தடமுறுநீர்த் தந்தனிற்றோயந் தகன்றதுவெங் கலியலைக்கத்தழார்ச்சியெய்
யிடமுறுமே தினியிடத்தி னலைந்திடுநீ ளத்துறையுற் றினிதுமூழ்கி
நிடதநெடு நாடுமனை மீகவடைந்தா னளனென்னு நிருபனம்மா. (சு)

வந்துபெருஞ் சேனையுட னெதிர்நின்று நான்வணங்கா வயிரமேற்கொண்
டந்தநெடு நைமிசத்திற் றருப்பையினா லெளியேனை யெறிதலுற்று
முந்துயிர்கொண் டிடுபாவம் புகல்பூசந் துறையினிடை மூழ்கியன்றே
யந்தமில்சீ ருற்றபல பத்திரன்வீ டுற்றின்ப மடைந்தானீடு. (எ)

தண்ணிதழிவேணியனுக் கன்புடையீர் பகிரதனுந் தவத்தின்மிக்கான்
விண்ணிலுறு கங்கையினைப் பூதலத்தின் வரவழைத்து மேலைநாளி
லண்ணலுறு தனதுகுலத் தறுபதினா யிரவர்கதி யடையுமாறு
பண்ணியதத் துறையினிடைத் தைப்பூசந் தனிற்படிந்த பயனேயன்றே.

சிவநிசியி லொருகொடியோ னத்துறையிற் படிந்தெழுந்து சென்றுகோயி
லவனுறுசில் பொருளிரவிற் கவர்ந்துபுறத் தணைந்திடுங்கா லவனைத்தூதர்
கவனமுறக் கொண்டியமன் முன்விடலு மவனிறையோன் கங்குறன்னிற்
புவிபுகழ்பூசத்துறையிற்படிந்திட்டாய்கயிலையிடைப் போவென்றுய்த்தான்.

வேறு.

முன்ன ரொத்துணை யோர்களத் துறையிடை மூழ்கி
யின்ன நீர்ந்தின்ப முற்றன ரித்தகை யோரு
மன்ன திற்படிந் தெய்திய தறைதலுற் றினமீண்
டின்னு முண்டுபல் கதையதற் கேய்ந்துழி யறைதும். (௧௦)

குலியார்ணதீர்த்தச்சருக்க முற்றும்.

௨

சிவமயம்.

# சேடதீர்த்தச் சருக்கம்.

ஆடல் நாக மணிபகற் கன்பினீர்
நாடு பூசத் துறையி னலந்தரு
பீடு சால்கதை பேசி னுமினிச்
சேட தீர்த்தச் சிறப்புப பகருவாம். (௧)

ஆதி காலத் தரவின் குலத்திறை
பூத லத்தைப் பொறுக்க வலியிலா
னோது முறறுட லொல்கி யினிச்செயல்
யாதெ னப்பிறை சூடியை யெண்ணினான். (௨)

இன்ன செய்து மெனத்தெளி வெய்தினான்
மன்னு மிப்படி மீது மருவினான்
பொன்னி யங்கிடு பொன்னியி னத்தலத்
தன்ன தீண்டுறை யாடின னாடினை. (௩)

மகித லத்தைப் பரிக்கும் வலியலா
தகில லோகமு மருந்திடு மாற்றல்பெற்
றிகல்வின் மேருவிடை மருதீசனை
மகிழ்வு றிப்பணிந் தானெதிர் வாழ்த்தினான். (௪).

நற்றி றச்சிவ ஞானத் திருவொடு
மற்று நீடு வரங்களு மின்புறப்
பெற்றி னன்விடை கொண்டு பெயர்ந்தன
னுற்ற னன்ற னிலகு மூலகிடை. (௫)

மன்னு சேடன் மருவிமுன் னாடிய
தன்மை யாலத் தடந்திரைப் பூந்துறை
யன்ன வன்றிரு நாம மணிந்தது
துன்னு மெவ்வயி னோருந் துதித்திட (௬)

சேடதீர்த்தச்சருக்க முற்றும்.

சிவமயம்.

# கந்ததீர்த்தச் சருக்கம்.

அந்த மில்லவன் பெயரினோ டமர்ந்துதன் னிடைத்தீ
வந்து மூழ்கினோர் பவந்துலைத் தெதிர்வலி வழங்குஞ்
சந்த முற்றிடு தீர்த்தத்தின தனிச்சிறப் புரைத்தாங்
கந்த தீர்த்தமான் மியமினிக் கட்டுரைத்திடுவாம். (௧)

கூறி டத்தகைச் சேடதீர்த் தத்துறைக் குணபாற்
றேறு சீர்பெறு கந்தமா தீர்த்தமொன் றுளது
மாறில் செல்வமும் விசயமுங் கீர்த்தியும் வழங்கு
மாறு மூன்றெனுந் திதியினு ளினிலணைந் தாடின். (௨)

ஆர மேருவைப் பறித்தெடுந் தம்மனை யாடும்
பாரி டங்களீ ராயிர வெள்ளமும் பரவுங்
கூரி லங்குவச் சிரத்தனுங் குலவுபல் சுரரும
வீர வாகுவே முதனவ வீரருஞ் சூழ. (௩)

வண்ண வேற்படை முருகவேள் கயிலைமால் வரைநின்
றெண்ண ரும்புகழ்ச் சேய்ஞலூ ரெய்திமுச் சுடர்க்க
ணண்ணல் பாசுப தாத்திர மளித்திடக் கொள்ளா
வுண்ம கிழ்ச்சிமிக் கிடைமரு தெனும்பதி யுற்று.

மன்னு றுஞ்சர மருங்குதித் திலங்குமீன் வளர்த்துக்
கொன்ன வின்றிடு மயில்கொடு தானெனக் குலவும்
பொன்னி மாநதித் தென்புடை புகுந்தெழி லுறையு
முன்னி சைத்திடு துறையிடை மூழ்கினு னினிது. (௫)

மருத வாணனைப் பணிந்தெதிர் வருஞ்சில வேற்றுக்
கருது தென்றிசை மயேந்திரங் கலந்தசு ரனைநேர்
பொருது வென்றவன் படைஞர்கள் போற்றிட மிமையோ
ரிருதி றத்தரும் விசும்பினிற் குழுபுக விழைத்தான். (௬)

அந்த வான்பழி யூர்திவந் தாடிய திறத்தாற்
கந்த தீர்த்தமென் றிசைப்பர்கள் கருதுமத் துறையைச்
சந்த நீடயி ராவதஞ் சாற்றுமத் தலத்தில்
வந்து சோதியைப் பூசித்த வாறினி வகுப்பாம். (௭)

கந்ததீர்த்தச்சருக்க முற்றும்.

சிவமயம்.

# ஐராவததீர்த்தச் சருக்கம்

செஞ்சலசப் பொகுட்டிலிருந் தருண்மடந்தை புகழ்வாக்கின் செல்
விக்கங்கோர், விஞ்சு கதிர் மணியெழிற்பொன் னரிமாலை யுகந்தளித்தாள
விளங்குமன்னா, ளெஞ்சலில்சீர்த் துருவாசற் கிந்தனவென் னவனிமையோ
ரிறைவற்கீய, நெஞ்சினிடைக் குறித்துறுபொன் னுலகடைந்தா னவன்ற
சென்ற நேரத்தன்னான். (௧)

கனிமொழிச்செந் துவர்தழ்ப்பொற் கலசமுலை மேனகைவெண் பவரிவீச
நனிமலர்ப்பூங்குழற்கயற்கட் டிலோத்தமைமென் சதிமுறையி னடிப்பமீது
தனிமதித்தண் குடைநிழற்றக் கடங்கவிழ்வெள் ளானைமிசைத் தகைமந்தா
ரப், பனிமதுத்தண் மலர்சொரிந்து வானவர்போற் றிடமறுகிற் பவனி
போந்தான். (௨)

ஆங்கவனைக் கண்டுமுனி வரன்சிலவா சிகள்கூறி யதனையீந்தான்
றீங்குவரு காலமதி கெடுமன்றே யன்னவனோர் செங்கைநீட்டி
வாங்கிமத யானையின்மேல் வைத்தனன்மற் றதுஉம்விலங்கின்மரபதன்றோ
தாங்கிலதாய மறுகினிடை வீழ்த்தியெதிர் தேய்த்ததுதன் றாளினாலே. (௩)

கண்டதனைத், துருவாச முனிவரனிந் திரற்சீறிக் கரியநஞ்ச
முண்டுலகங் காத்தபரா னடியவர்கள் விருப்பமுறா தொதுக்குஞ் செல்வங்
கொண்டுமதங் கொண்டொருகை கொண்டெதிர்நான் கொடுத்ததனைக்
கொண்டுநீடு, மண்டுகளி யானைமிசை வைத்தனையாங் கதுசிந்த மதித்தி
டாது. (௪)

நீயிவணித் துணையிறுமாப் பெய்தியது செல்வமதி னிலையினன்றோ.
வாயதுமித் தொடைக்கடலிற் சிந்திடுக யானையுங்காட் டானையாகிப்
பாயபுவி மீதுழல்க வெனச்சபித்தான் சபித்திடுமுன் பரவைமீது
மேயபெருந் தனிச்செல்வஞ் சிந்தியதீ தனைக்கண்டோர்வினைகளென்ன.

துறந்திடக்கண் டெழிற்செல்வ மிந்திரன்மா துயரினொடு துணுங்கினின்றா
னிறந்தமைந்த சால்புடையா ராயினுமென் னாம்வெகுளி னிசைக்கு மே
லோர், சிறந்திடுசெல் வுமமிர்த மனையகடல் கடைந்துகொண்டார் தே
வர்பின்னாள், மறந்ததும்பு வெண்களிறுங் கிரியுருவா யுலவியது வைய
மீது. (௬)

வேறு.

தன்னுயிர் தனையும் புரந்துதற் சார்ந்தோர் தம்மையும் புரந்திடுங் கொற்ற
மன்னனைச் சேர்ந்து வாழ்வதே பெருமை வறுமையாற் பிறரினூற்றுயரும்
துன்னிடு விதிர்ப்புந் தான்மிகமருவித் தொடர்புறத் தனியடைந்தவரு
மின்னல்கூர்ந திடக்கண் டிருக்குமே மழையைச்சேர்ந் திருந்திடலேழமை
த்தன்றே. (எ)

வேறு

பூவலயத் தலைக்கிடுநா ளொருபகலோங் கிடைமருது பொருந்திக்கோடு
மேவிமணி யுருக்கொண்டு துதிக்கைகொடு தனைப்போல விளங்குநீடு
காவிரிக்க ணுறுபுகந்த தீர்த்தமதி னறன்றிசையிற் கதழ்விநேகு
மேவிரண்டின் வளர்லிக்கி னேசுரதீர்த்தந்தனைச்சென் றெய்திற்றம்ம. (அ)

சென்றபுனல் படிந்திடலு மணிமாசு கழுவுற்ற திறமேயென்னத்
தோன்றிலகு தனதுருவந் தோன்றிடக்கண் டுவகைமனந் துளும்புவுற்றுக்
கொன்றையறு கணிதருசெஞ் சடையவனை மருதடியிற் குடியுற்றோனைத்
தன்றிருக்கண் களிகூரக் கண்டுபணிந் தேத்தியது தகைமைதோன்ற. (௯)

வேறு.

கருவினிடைப் புகாதபடி யெளியேன்மீது
காத்தியென நின்றிரந்து கருத்துங்கண்ணு
மொருவகைமீண் டிடக்கொண்டு குணபாற்சென்றங்
கொருபதியை யுறைபதியாக் கருதிவைகித்
திருமருவு நிறத்தன்முத லெவர்கள்வாழ்வுஞ்
செஞ்சடைவா னவனடியைப் பூசைசெய்து
பொருவிலவன் றரப்பெற்ற தென்னத்தேறிப்
பூசிப்பான் றனுமுறப் பொருந்திப்பேகி. (௧0)

வைகலுறு முப்பொழுதுந் தனக்குச்தூய
வடிவருள்கா விரிதுறையின் மருவிமூழ்கிக்
கைகலந்த புனலினொடு நறுமென்போதுங்
கருத்தில்வள ரன்பினொடு களிப்புங்கொண்டு
மைகலந்த தனிமிடற்று மருதவாணன்
மலரடியைப் பூசித்து வணங்கிப்போற்றப்
பைகலந்த வரவினொடு மதியஞ்சூடு
பரன்சிலநா ளணைந்திடுமு னெதிரேதோன்றி. (௧௧)

ஈண்டுறுமெய் யன்பினொடு நமைநீபூசை
யியற்றியதான் மிகமகிழ்ந்தோ முனக்குகம்பால்
வேண்டுவதென் னிசைத்தியெனப் பணிவுற்றம்மா
வெய்யதிரு வாசமுனி கொடுத்தசாப

மாண்டதெழிற் பொன்னியிடைப் படியுமுன்னர்
மன்னிடுநின் னருளதனு லினியெந்நாளுங்
காண்டலுட னின்மலர்த்தாள் பூசித்தீண்டே
கலந்திருக்க வருள்கவென வுரைத்தேத்தி. (கஅ)

இன்னணமக் களிறுரைப்ப மருதவாண
னித்தலத்தி னமையொருகா லருச்சித்தோர்கள்
மன்னுதனிச் சிவலோக மெய்துவார்கள்
வச்சிரத்தோ னமதிடத்தி லன்புறுகு
மன்னவன்பாற் சென்றிருநீ சின்னாள்பின்ன
ரண்ணிமருவு சிவபுரியி னடையலாகு
மென்னவுரைத் தானதுமா றுரைப்பவஞ்சி
யிமையோர்கள் போற்றவிண்ணு டுற்றதன்றே. (கக)

நினைவரிய புகழ்விக்கி நேசுரதீர்த்த தத்துறைமுன் னிலவுநாற்கோட்
டனையகளி றுடிதிறத் தாலயிரா வணத்துறையென் றறையுநாமம்
புனைதரலுற் றிட்டதம் துறைபதிய் மதன்பெயராற் பொலிந்ததம்ம
வினியினிய நெடுஞ்சீர்த்தி வீரசே னன்கதையீண் டெடுத்துச்சொல்வாம்.

ஐராவததீர்த்தச் சருக்க






உ

சிவமயம்

# சருக்கவகராதி.



சருக்கவகராதி முற்றும்.

சிவமயம்

# வீரசேனச் சருக்கம்.

மலைய முறுசந் தெதிர்கோடு மலையு மதவாரணக்கோடு
நிலைகொள் கடலின் பெருவயிறு நிறையத் தூர்க்குந் தண்பொருநை
யிலகு கரைமேற் பரிவேட மினிது சூழ வொளிருமதி
வலையு மென்னத் திரையகழி சூழவுறுமோர் வளம்பதியே. (௧)

வார முறுமவ் வளம்பதிவீற் றிருந்து முறையிற் பாரரப்போன்
கூர்மை தோன்றி யெழிறழைத்து மதுகை மலர்ந்து கோபங்காய்த்
தாருங் கொடிய வேலைபழுத்திட் டிலகுநெடுவே லங்கையினான்
வீரசேன னெனும் பெயரா னொருவன் கலைவில் வேளெழிலான். (௨)

அன்றோ ரொருநா ளடவிபுகுந் தடல்வெஞ் சேனை தன்னொடுஞ்
செந்நாய் கவரி புலிகரடி திரிகோட் டிரலை மரைகளிறு
முன்னா மிருகம் பலநாடி முடுகிவேட்டஞ் செயுங்காலை
மன்னன் மறையோன் வேட்டைவியப் பறிவா னொருவன் மருங்குற்றான்

வருண னெனவே குடதிசைநாட் டரசன் வண்கார் முகம்வளைத்திட்
டுரைசெய் யம்பின் றொடைமிக வுய்க்குங் காலை யொருவாளி
பொருவில் விலங்கா மொருகேழல் வயிற்றுட் புகுந்து புறத்துருவி
யருகு விலங்கா மறையவன்மேற் பட்டதவனும் பட்டானால். (௩)

வேந்த னதுகண் டுளநடுங்கி வினாவி னுய்த்தி யருமறையோன்
சோர்ந்து கிடத்தல் கண்டுடலஞ் சோர்ந்து விழிநீர் சோர்ந்திடநின்
றார்ந்த விலங்கின் குழுமறைவி லனையா னின்ற தறியாமே
கூர்ந்த கணைவிட் டிவன்றன்னைக் கொன்றே னந்தோ வென்செய்தேன் ()

என்ன விரங்கூற் றிடுங்காலை யெதிரோ பிரம கத்திதனி
மன்னுங் கரிய பெருவடிவும் வளைவெள் ளெயிறுஞ் செம்மயிரு
முன்னுங் கொடிய குரலுமிருப் புலக்கை யோங்கு நெடுங்கரமுந்
துன்ன வணைந்து பழிதருநீ யென்ற தரசன் றோள்பற்றி. (௫)

வேறு.

என்ற போதிறை யேங்கியு ளிலகுமெத் திசையு
நின்றி டவ்வுரு நோக்கின னீடுகண் முகிழ்த்தான்
றன்று பேய்பிடித் திட்டிடுன் மத்தர்கள் சிலைவக்கண்
மன்ற லம்பருந் தினமொன விளங்கினன் மாதோ. (௭)

ஏங்கி மன்னவன் சிலபக லுழன்றிடு மேல்லை
பாங்க ருற்றிடு குரவரும் பனவரும் பாராத்
தாங்கு மிவ்வினை புண்ணிய தீர்த்தங்கள் சாரி
னீங்கு மென்றிமற் றேவற்றினு நீங்கரி தென்ன. (அ)

பார்த்தி பன்றனைச் சிவிகையிற் பரிவொடுங் கொண்டு
சூர்த்த வாட்படைப் பனட்சில சூழுற வெய்திக்
கூர்த்த புண்ணியத் தலங்கள்சென் றவற்றிடைக் குலவு
தீர்த்த மானவை மூழ்குவிந் திங்ஙனஞ் செல்வார். (௯)

நலங்கொள் செம்பிய னுடனைந் தன்னதி றுப்ப
ணிலங்கு பேரிடை மருதெனு மெழிற்பதி மேவித்
துலங்கு காவிரிப் பூசநீர்த் துறையிடை விடுத்தா
ரலங்கல் வேவினு னெல்லைசென் றுடின னந்நீர். (௧௦)

முழுகி மேனிமிர்ந் திடுதலு மூழ்கின மூரிப்
பழவி னைக்குலம் பனவனைப் படுத்திய பழிமற்
றெழுத லுற்றொரு கருவலா யெனவெதிர் நின்ற
தெழில்கொள் பூந்தொடை யவன்சுமை யெறிந்தவ னுைத்தான்

காவன் மன்னவ னோடிமுன் பணிந்தது காணூ
யாவ ரும்வியப் பெய்துழிக் கொடும்பழி யெழுந்து
தாவி யோர்புறஞ் சென்றதூஉந் தார்பதி தெளிவு
மேவ னோக்கினர் மிகுமகிழ் வெய்தினர் மேலும். (௧௨)

வைய கத்தினித் தலநிகர் வளந்திகழ் தலனுந்
தூய்ய பூசநீர்த் துறைநிகர் துறையும்வே றிலையென்
றுய்ய யாவருந் தெளிந்தெங்க ணறிவிர்த வுனக்குச்
செய்வ தென்னநா னியுமித் தலத்திடைச் சேர்ந்தாய். (௧௩)

வருதி யடலென வுரைத்தன னலைய மருவி
மருத வாணனைப் பணியவுள் புகுந்தனன் வாட்கைத்
திருகு வெஞ்சினக் கனைதிபர் தடைகொடு தியங்கி
விரவு மப்பழி நின்றது வாயிலின் வெளியே. (௧௪)

அன்ன மென்னடைப் பனைமுலை யம்பிகை யகத்து
முன்னு டத்திறஞ் சோதியா யெழுந்தருண் மூர்த்தி
தன்னை நீள்பெருங் கயிலையாந் தனிமரு தோர்பான்
மன்னு தாணுவைக் கண்டெதிர் மன்னவன் பணிந்து. (௧௫)

அகில காரண நிற்குண நிராமய வமல
தகுநி ரஞ்சன நித்திய தற்பரா னந்த

சகள நிட்கள சங்கர சதாசிவ மருத
மிருகி ழற்கண்வீற் றிருந்தருள் வித்தக சரணம். (கசு)

தரணி மீதுணர் விலாதுசெய் கொடும்பவுந் தன்னு
னரகெ லாமுழன் றிடத்தகு நாயினன் றன்மேற்
கருணை வைத்துநின் னடிமையாக் கியபெருங் கடவுண்
மருத நாயக புணைமுலை மணாளனே சரணம். (கஎ)

என்று நெஞ்சநெக் குருகிட விருகையுந் தலைமேற்
றுன்று மஞ்சலி முகிழ்த்திட விழிகணீர் சொரியக்
குன்று முதலுன் புருவமாய் மொழிகளங் குழற
நின்று பற்பல துதித்தனன் களித்தன னீடு. (கஅ)

பின்னு மித்தலத் திவ்வுட லளவுநாள் பிறைகொண்
மன்னு வார்சடைப் பரமனை வணங்குவே னிருந்தென்
றுன்னி நேரிய னுடுமகிழ் துறைந்துபன் னுட்பின்
வன்னி சூடிதன் னருள்கொடு மருவினன் கயிலை. (ககூ)

வீர சேனனென் றிசைபெறு பெருந்திறல் வேந்தன்
கோர மாகிய பழிதொலைத் தரனருள் கூடுந்
*தார நீடெழிற் றனிவரை சார்ந்தமை யுரைத்தேம்
பார சித்திர கீர்த்திதன் காதைமேற் பகர்வாம். (உ௦)

வீரசேனச்சருக்க முற்றும்.

---

உ
சிவமயம்

## சித்திரகீர்த்திச்சருக்கம்

முத்தமிழ் மணக்குங் கூடன் மூதுபதி யிடத்தில் வாழ்வோன்
கொத்துறு வேம்பின் கண்ணி குலவுறு குவவுத் தோளான்
சித்திர கீர்த்தி யென்னத் தெரிக்குமோர் தென்ன னேரி
னித்திலஞ் சொரிவில் வேலை நேருமெய்க் கல்வி மிக்கான் (க)

இன்னவ னகரின் பாங்கோ ரெழிலுறு மலர்ப்பூஞ் சோலை
தன்னிடை யொருநா ளெய்தித் தனிமையி னுலாவுங் காலை
மன்னுறு தோழி மார்பின் வந்திட முந்து மேவித்
துன்னலர் பறித்திட் டாண்டோர் துடியிடை மயிலைக் கண்டான். (உ)

---

*தாரம்=வெள்ளி.

கண்டிவ ளரங்கன் வாழ்வோ கமலமேல் லியலோ வன்றி
யண்டர்கட் கின்ப நல்கு மரம்பையோ சசியோ விந்த
மண்டலத் தணங்கோ வென்ன மனத்தினோ ளைய முற்றான்
கொண்டிடு மிமைப்பு நோக்கிக் குறிக்குமவ் வையந் தீர்ந்தான். (௩)

அன்னவள் சிறப்பு நோக்கி யகத்துறு வேட்கை நோக்கித்
துன்னுநம் மகத்த வாவுந் தோற்றமிங் கிவட்கென் றெய்திப்
பின்னர்நின் றணங்கென் னெஞ்சம் பேதுறத் தகைத்த தந்தக்
கன்னல்வே ளம்போ வுன்றன் கண்ணம்போ பார்த்தி டென்றான். (௪)

என்னைநீ தனியே நிற்ற விருளையர் வரவு பார்த்தோ
மன்னுமென் வரவு பார்த்தோ வாய்மலர்ந் தருள்க வென்று
முன்னிலை யாக்க வெண்ணி மொழிந்தனன் மொழியு முன்ன
ரன்னமென் னடைப்பூங் கோதைப் பாங்கிய ரணுக வந்தார். (௫)

அன்னவர் தமிலோர் பாவை யரசனை நோக்கி யைய
வின்னளுன் கிளைஞர் தம்மு ளின்னவர் புதல்வி யன்றோ
மன்னவ ரிடத்திற் பேசி மணம்புரிந் தினைய ளின்பந்
துன்னுக முறையி னென்றாள் சொல்லிய திசைவெ னாற்றான். (௬)

துதுமென விருக்கை யெய்திக் காதன்மந் திரிகட் கோதி
முதுவரக் கிளைஞர்க் கோத மொழிதரு மனைய ரீந்த
மதுமலர்க் கோதை மின்னை மனமகிழ்ந் தினிது நல்கப்
புதுமணம் புரிந்து கூடிப் புகலுறு மின்ப மார்ந்தான். (௭)

தறைபுக ழனைய மாதின் றன்பெயர் சுகுணை யன்னாள்
பொறையினிற் புகல்பூ மாதும் பொற்பினிற் பூவின் மாது
முறழ்பவ ளவர்க ளாவி யொன்றுட லிரண்டின் வாழ்நா
ளறமிகப் புரிந்து மைந்தர்ப் பேறிலா தலக்க ணுற்றார். (௮)

நனிபகல் வருந்திப் பின்னர் நரபதி மதலை யெந்தத்
துனிதரு வினையா லின்றோ தொழுதுமுப் பொழுது மோர்ந்த
முனிவரை வினவு மென்ன மொய்குழ லணங்கி னோடுந்
தனிமுத லடியுட் கொண்ட சாபாலி யிடத்திற் சென்றான். (௯)

சென்றடி பணிந்து கையிற் செய்பவாய் புதைத்து முன்னர்
நின்றனர் கருணை கூர்ந்து நெடியவேலோன் மேருவிற்கொண்
டொன்றிலை ரிருக்கு மூன்று ரிருந்தழ லொருங்கு கூட
வென்றவன் றன்னை முன்னி மேலவ னினிது கூறும். (௧௦)

மன்னமுற் பவத்தி னீயோர் வணிகனின் றனக்கப் போது
மின்னளே யுரிய கீர்த்தை யீனையள்பூ மடந்தை யாளு

என்னதாங் குணர்ந்து நீமா லாகிமற் றணைந்தின் புற்றாய்
துன்னுமப் பவத்தி னாலே தோன்றலிப் பவத்தி னில்லை. (கக)

திங்கடோ றினிது மேவுஞ் சிவநிசி விரத நோற்றாய்
பொங்குமத் தவத்தி னாலே புரவல னாகி வாழ்ந்தி
யிங்கென திடத்தி னீவி ரெய்திய திதற்கு நம்பாற்
றங்கிடு துயரந் தன்னைத் தகர்த்தனுப் புவன்மேக னீது. (கஉ)

இலங்குமந் திரங்க டம்மி லிசைக்குமஞ் செழுத்து நீடு
நலந்தரு நூல்க டம்மி னவின்றிடு மறையு மெண்ணும்
பலந்தரு தேவர் நம்மிற் பரமனு மதிக மென்னத்
தலங்களி லதிக மாருந் தனியிடை மருது மன்றே. (கந)

மின்னிடை யிவடன் னோடும் விளங்கிடை மருதி னெய்திப்
பொன்னியல் வாவி பொன்னி புகழுமை கருணை வாரி
யின்னவை படிவுற் றீச னெழிற்பதம் வணங்கிப் போற்றிற்
றுன்னுறு பவமு நீங்குந் தோன்றலும் விரைவிற் றோன்றும். (கச)

அங்கதன் பின்னர் மீனத் தாதவன் புணரு நாளிற்
றிங்கள் சூடிறைக்கு நீடு திருவிழாப் புரிதி யென்றான்
செங்கதிர் வடிவேற் றென்னன் சென்றவன் விடைபெற் றாங்குத்
தங்குமத் தீர்த்த மெல்லாஞ் சார்ந்தனன் மகிழ்ந்து மூழ்கி. (கரு)

பெருநல முலையா ளென்னப் பேசிடு மினிதை யோர்பான்
மருவுறு மிறையோன் செய்ய மலரடி வணங்கி யந்தத்
திருநக ரிடத்திற் சின்னாள் செலுத்தினன் செலுத்துங் காலைக்
கருநெடுங் கண்ணி னாளோர் காதலற் பெற்றாண் மன்றே. (கசு)

அத்திற முணர்ந்த வேந்த னனந்த வெள்ளத் தாடு
மெய்த்தவர் புகழும் பொன்னி வெள்ளத்து மூழ்கி வேத
வித்தகர் தமக்கு மியார்க்கும் வெங்கன னயன மோங்கு
மத்தகன் றனக்கு மம்ம வுரையிலாப் பொருள்க ளீந்தான். (கஎ)

சித்திரத் துவச னென்னத் தெரிந்திடு நாம மைந்தப்
புத்திரற் களித்தன் னாளும் புகழுறு மனையுஞ் சூழச்
சத்திர நிழற்றத் தானை தழைவுறக் கூடல் சார்ந்தான்
பத்திர முறவீ சர்க்குப் பங்குனி விழாவுஞ் செய்து. (கஅ)

வேறு.

கைத்தி ரெந்தொடைச் சித்திர கீர்த்திதன் காதை
யித்த கைத்தினித் திகழொரு மறையவ னெய்தி
யத்த லத்திறை தனைப்பணிந் தருள்கொடு விசுவா
மித்தி ரப்பெருங் குரிசிலா யியகதை விரிப்பாம். (கக)

சித்திரகீர்த்திச்சருக்கமுற்றும்.

சிவமயம்

# விசுவாமித்திரச் சருக்கம்

பரவுதெண் டிரைநீர்த் துங்க பத்திரா நீரந் தன்னிற்
சுரர்புகழ்ச் சத்த கோடி சுராலய மென்னு மோரூர்
திருவள ரனைய வூரிற் றிகழுமோ ரந்த ணாளன்
தருமசிந் தனையு மீசன் றன்னடிக் கன்பு மிக்கான். (௧)

புலருமுன் னெழுந்து மூழ்கிப் புனிதநீ றணிந்து தும்பை
குவளைமல் லிகைவெண் முல்லை கோங்குமந் தாரை சாதி
நலனுறு நீல மாதி நால்வகை மலரும் வில்வம்
பொலிதுள வாதி யுங்கொண் டீசனை பூசிப் பானால். (௨)

காதலிற் பூசிப் போர்கள் கலந்திடு முலர்ந்த போது
கோதுறு சிலந்தி யெச்சங் குறையிதழ் சுருங்கல் வாட
லோதிடு மயிர்ச்சிக் குண்ட லூறுபுழுக் கடிக ளாதி
சோதியா தருச்சிப் பாரேற் குருடராய்த் துலங்கு வார்கள். (௩)

பூசனைக் குரிய மற்றைப் பொருள்களு மினிது சோதித்
தாசள தகற்றல் வேண்டு மனையவன் சோதி யாது
தேசுறு பூசை செய்தான் றெரித்திடு மலர்க டம்மி
லேசுறு புழுவெட் டுண்ட மலருமொன் றிருந்த தோர்நாள். (௪)

விளம்புமக் குற்றந் தன்னால் விழிகளின் விடைய மேக
வுளம்பதைத் திரங்கி யேங்கி யுற்றவா றிஃதென் றோரான்
வளந்தரு வசிட்டன் றன்பான் மருவியீங் கெளிய னேற்குக்
களந்தரு குருடு வந்த காரண மென்ன வென்றான். (௫)

மாதவ னிமயச் செல்வி மணாளனை யிதயத் தெண்ணி
யோதுவ னந்தணா வுறுபொருள் சோதி யாமற்
சோதியர்ச் சனைசெய் தாயத் துணரினோர் பழுது போந்த
தாதலி னாத னாகி யாந்தையுற் றிடுகின் றாயால். (௬)

வேறு.

வாடன் மீதுநீ விழியொளி மருவுறு மெழில்செய்
மாட மீதுறு கொடியினான் மதிமறுத் துடைக்கு
மீடு தங்கிய விடைமரு தெனும்பதி யெய்தி
யாட கப்புனல் லாடுறி னையமின் றறைய. (௭)

ஆண்டு றைந்திடு மருதநா யகனிணை யடியைக்
காண்டல் செய்துநீ டன்பொடு கைதொழு தேத்தில்
வேண்டு மியாவையு முதவிடும் விளைவினை கென்றான்
பூண்ட காதலின் விடைகொடு போயினன் மறையோன். (அ)

ஏய்ந்து சீரிடை மருதிடை யிலங்கிடை வாளை
பாய்ந்து டுக்கலை யலைத்திடு பசும்பொனீர் வாவித்
தோய்ந்தெ ழுந்தனன் விழியொளி தோன்றிய தாங்கே
சூழ்ந்த காரிருள் நீங்கிடத் தோன்றுமா தவன்போல் (கூ)

மனங்க ளித்தன னியாவரும் வியந்தனர் மதனை
யனங்க னாக்கிய விழியின னடிமல ரிறைஞ்சி
யினங்கொ ளுண்மலர் சொரிந்தருச் சனைமுறை யியற்றிக்
கனங்கு லாஞ்சில வரங்களுங் கரங்கொடு சென்றான். (௧0)

அத்த னுத்தனைச் சிலபக லகன்றபின் னகற்றி
நித்த னைப்பணிச் தருச்சனை நிரப்பின திறத்தா
வித்த லத்துமேற் பிறப்பினி லிசைபெறு விசுவா
மித்தி ரத்தனிக் குரிசிலாய்த் தவத்தினு மிருந்தான். (கக)

தவத்தின் மேலவ னாகிய காலையிற சலச
பவத்தி னானி தியற்றிடு படைப்பினுக் கவன்முன்
புவிக்கண் மாறுறு விதிதனை புரிந்தன னிவையு
நவிக்க ரத்திடை மருதிறை வனைப்பணி நலனே. (கஉ)

சுருதி வல்லவ னாமொரு தூயவன் மேவி
மருத வாணனைப் பணிந்துமேன் மாதவத் துயர்ந்த
விரிவி னைப்புகன் றனமினி விளங்குதென் கூடல்
வரகு ணப்பெருந் தென்னவன் மாண்பெடுத் திசைப்பாம். ()

விசுவாமித்திரச் சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# வரகுணதேவச் சருக்கம்

எழில்கொள்பங் கயமாந் தொட்டி லிடைத்திரி கயல்க ளாட்டப்
பொழிலுறு மலாப்பூந் தாது போர்த்துவண டிசைகேட் டாளை
விழிதுயில் குளனுஞ் செந்நெல் விளைதரு வயலும் வைகைச்
சுழிதரு துநீர் பாய்ந்து துலங்கிடுந் தென்னர் நாட்டில். (க)

தென்னர்நா டென்னு மங்கைத் திருநுதற் றிலக மாகிப்
பொன்னினி திருக்குங் கஞ்சப் புதுமலர் மாட மாகித்
துன்றுசீர்த் தொல்லை யண்ட புருடன்மா துயாத சாந்த
மென்னுநற் றனமாகி யிலங்கிடு மதுரை தன்னில். (௨)

திகழ்மதிக் குலத்தின் மேவு தென்னவ ரெவருஞ் செய்த
புகரில்சீர்த் தரும மியாவும் பொருந்தொரு வடிவு போல்வான்
பகர்தருஞ் சுந்த ரேச பாதசே கரன்றன் மைந்தன்
புகழ்வீர குணநா மத்தான் புரவல னொருவ னன்னான். (௩)

வன்பகை யரச ரியார்க்கு மடங்கலாய் வறுமை கூர்ந்தோர்க்
கன்புரு வாகி விண்ணி லமர்ந்திடு தருவா னாகி
யின்புறு மடநல் லார்கட் கிகன்மணக் கோலஞ் செய்யு
முன்பின னாகி வைய முறைசெயு நாளி லோர்நாள். (௪)

மேவிய கழற்கா லொற்றர் விரைவின ரிருவ ரெய்திக்
காவத மலையின் மேல்பாற் கடத்திடைக் கவரி யேனந்
தீவிழி யுழுவை யெண்கு திரிமருப் பிரலை யாதி
மாவின மிடைந்த தின்று வாய்த்திடும் வேட்டை யென்றார். (௫)

என்றலும் வேட்டஞ் செய்தற் கிசைவன செய்ய முன்னஞ்
சென்றிடு வோரை யேவிச் சிறந்தவாம் பரிமேற் றானுந்
துன்றிருஞ் சேனை சூழத் தூரிய முழக்கங் கேட்டு
மின்றயங் கெழிலி யஞ்ச வெய்தெனச் சென்றான் மன்னோ. (௬)

ஒற்றர்க ளுடன்முன் சென்றோ ருணர்சுவ டொதுங்குங் கானிற்
பற்றுயிர்க் கியமன் காட்டு முடலெனப் பார்வை வைத்து
மற்றவன் வீசு பாச மானவார் வலைசூழ் போக்கிச்
சுற்றவன் றூத ரென்ன நிறுத்தினார் தொடக்கு நாய்கள். (௭)

மன்னனும் வேட்டைக் கானின் மருவவங் குற்றோர் வந்து
பண்ணுந்தம் முயற்சி யாவும் பணிந்தெதி ரிசைக்க நோக்கித்
துன்னுறு விலங்கி னீட்டந் தொடர்ந்தினி யெழுப்பு மென்றா
னன்னவ ருவகை துள்ள வுமைந்தனை யனைய தாற்ற. (௮)

வேறு.

பம்பை தடாரி வலம்புரி பேரிகள் பாடுறு துடிநீடு
கொம்பினொ டாதி கடந்திடு மோதைகள் கூவிளி தருமோதை
யம்புலி மாதிர மண்டக டாகமு மார்தர வெழலோடும்
வெம்புலி மான்மரை பன்றிகு டாவடி மேவின வெதிர்சீறி. (௯)

கோலிச் சிலைமற வோர்விட் டனரடு கோலுய்த் தனர்வளை யதன்மீதே
காலற் றனசில வீரிட் டனசில காதற் றனசில மிகநீடார்
வாலற் றனசில வோடுற் றனசில வாடுற் றனசில குட்டர்சோர
மாலுற் றனசில நைப்பற் றினசில மாய்வுற் றனசில விறன்மாவே. (௧௦)

விரவிய மறவர்க ளெழுதரு படைகளின் மெலியுமு னுகர மிகநீடுங்
கருணையின் வலைப்பல விடுபவ னென்னவொரு கணைகொடு கானிடை வெகு
மருவுற விடவுழை புலிமுத லியபல வாளிகள் சிலவேவி [தூர
நிருபனு நினைவினை நிறுவினன் வனமதி னிலவின சோரியி னதியோடி.

இத்திற முச்செயன் முற்றிய தக்கண மெத்திசை வீரரு மெதிராக
மொய்த்தனர் மற்றவர் சுற்றிட மெச்சிடு முதுதமிழ் மாறனு மகிழ்வோடி
யுத்தம நித்தில வட்டம திக்குடை யுற்றிடு நீள்கதிர் மிசைசூழ
நத்தலை யுற்றக ழுத்தினின் முற்றிடு நற்பதி சார்தர வருவேலை. (௧௨)

வேறு.

மதிவழி மன்ன னுற்று மாவியல் வேட்டஞ் செய்யக்
கதிரவ னோக்கித் தானுங் கலந்துநீள் குடபால் வெற்பி
லெதிருறு மரக்க னானு மிகலுமா வேட்டை யாடி
வதியுமத் திசையி னெங்குங் குருதியாய் வயங்கச் செய்தான். (௧௩)

மருளுற நமைத் தூரத்து மதிக்குல மதனிற் றோன்று
நிருபனு மினனுக் கின்றோர் நெடும்பழி யெளிதி னீண்டு
வருதலைச் செய்து மேலும் மதிக்கியற் றியதா மென்று
கருதிலுந் தடைந்த தென்னக காரிருள் சூழ்ந்த தன்றே. (௧௪)

இருளெதிர் கலக்கு மாலை யெனச்சொலுங் காலை தன்னிற்
குரகதந் தனது மேற்கொள் கொற்றவன் றன்னோ டெய்யுஞ்
சரகதி கொண்டு சூழுந் தானைபின் றொடரத்தான் முன்
விரைவொடுஞ் சென்ற தந்த வியனகர்ப் புறத்து மாதோ. (௧௫)

மன்னெறி யிடைக்கி டந்தோர் மறையவன் றுயின்றான் மாலுற்
றன்னவன் றனகோர் கால னுமென வணைவுற் றம்மா
தன்னடி யுரத்தின் வைப்பத் தளர்வுகொண் டிறந்தா னாக
வின்னதென் றறியான வேந்த னெழினகர் புகுந்தான் சென்று. (௧௬)

மித்திர னுடுநா னில்லா வேலையென் வழிதீ தாற்றச்
சித்திர மிழைத்தி டல்லைச் சிதறிடத் துணித்தல் செய்வே
னெத்திசை யவருங் காண வெனச்சிவந் தெழுந்தான் போல
வத்திமீ தெழுந்தா னல்லோ னமர்தரு கரவாளி வீசி. (௧௭)

இறையவன் றேன்ற முன்ன ரிகலுறு குறும்பு செய்த
குறுநிலத் தவர்களோடுங் கொள்கையி னிருட்கு ழாஞ்சென்
றுறுமொளி யிலாது வ்வகு முழைதொறு மொளித்த தந்த
மறையவன் இடக்கை பின்னர் வந்தணந் தவர்கள் கண்டார். (கக)

நம்புறு மவன்றன் கேளிர் நரபதிக் கதுசென் றோதக்
கம்பமுற் றவனீ யா னீது கண்டிலே னென்று வேண்டுஞ்
செம்பொனீந் திறந்தா னுக்குச் செய்வன செய்தியென்றான்
வெம்பழி தானும வந்து பிடித்தது விலக்கு வார் யார். (கஉ)

மட்டவிழ் வேம்பின் றாரோன் வன்பழி மருவி யெங்கு
நெட்டுயிர்ப் பெறியும் வாளா நின்றிடு மார்க்கும் வண்கை
கொட்டும்பற் கடிக்கு மாடுங் குலவுமப் பழிமுன் வந்து
கிட்டியச் சுறுத்த வஞ்சுங் கிடைக்குநல் லறிவுஞ் சற்றே. (உo)

பொருந்திடர் தீர்க்கப் பின்னர்ப் பூசுரர்க் கம்பொ னுதித்
திருந்திடு தான மீந்துந் தேறுவிற் கறுகு கொய்தாங்
கருந்திடக் கொடுத்து நீடு மகமரு டணத்தி னோமம்
புரிந்துமற் றதுநெய் பெய்த தழலின்மேற் பொலிந்த தன்றே. (உக)

பின்னும்பல் விதங்கள் செய்தும் பெயர்ந்திடா தொழிதல் கண்டு
நன்னெறிக் கலைவல் லோர்க ணரபதி தன்னை நோக்கி
யின்னநான் மாடக் கூட லிறைவனை வணங்கிச் சின்னாள்
மன்னுற வலஞ்செய் தன்பின் வந்திடிற் றீரு மென்றார். (உஉ)

அங்கவ னவ்வா றெய்தி யத்திற னெழுகு நாளிற்
றுங்கமால் வரைவிற் சோம சுந்தரக் கடவுள் விண்ணின்
றிங்குவந் தார்த்தார் வேந்த னெதிர்த்துநின் னொடுபோ ராற்றிப்
பங்கமுற் றோடு வான்மேற் படர்குவை தொடர்ந்து நீயும். (உஙு)

அவ்வழி நம்மை நாமே யருச்சனை புரிந்து வைகுஞ்
செவ்விய மருதூர் சேர்வரிப் சேர்தரு முனன றன்றன்
வெவ்வினை யகலு மென்ன விளம்பினு னதுகேட் டன்னான்
றிவ்விய வருளை வாழ்த்தி யிருந்தனன் செங்கோன் மன்னன். (உச)

சிலபக லகன்ற பின்னர்ச் செம்பிய னனைய வாறே
புலிவளர் துவசு மோங்கு பொருபடை கடலிற் சூழ
விலகுதூ ரியங்கள் வேனி லிடியென முழங்கச் சென்று
குலவுறு தென்னர் நாட்டிற் கூடலின் மருங்குற் றானல். (உரு)

தென்னனு மதனை நோக்கிச் சேல்விழிக் கன்னி பாகன்
றன்னருள் கருதிப் போற்றித் தடங்கடற் சேனை சூழத்
துன்னுறு வேம்பி னோடு தும்பைவேய்ந் தெழுந்து நீடு
பொன்னகர்ப் புறத்தி னுற்றான் பொன்னியந் துறைவன் முன்னர். (௨௬)

வேறு.

உற்ற காலையிற் செம்பிய னுறுபடை வீரா
வெற்றி வார்சிலை வளைத்தனர் விடுத்தனர் பகழி
யெற்று நேமிகள் செலுத்தின ரெறிந்தனர் கவண்கல்
முற்று நானிலங் கழித்திடச் சொரிதரு முகில்போல். (௨௭)

முன்ன ராங்கவ ரடல்வினை தொடுத்தலு மூரிக்
கன்னி நாடவன் சேனைசூழ் கடுஞ்சின மறவோர்
கொன்ன வின்றிடு சிலையொடு புருவமுங் கோட்டி
மின்னு தீப்பொறி விழிவிட வாளிகள் விடுத்தார். (௨௮)

சகர மற்றன புலிக்கொடிச் சில்லியந் தடந்தேர்
புகர்மு கக்களி றலகில வுருண்டன புவிமேற்
பகர் பரிக்குலந் திசைதொறும் பாய்ந்தன துணிந்து
தொகையில் வீரர்கள் புகுந்தனர் துறக்கநன் னாடு. (௨௯)

நீனகே தனன் படைத்தனி மந்தரம் விரிதன்
சேனை யாநதடக் கடலினைக் கலக்கலுஞ் சினந்து
மான மிக்கொள விடமென வெழுந்திசை வளவன்
றானு மங்கடு வேகத்தின் விடுத்தனன் சரங்கள். (௩௦)

உந்தும் வாளியி னளவையின் றொருங்குதன் சேனை
முந்தும் வீரர்கண் முடிவது முடிநெடுந் தேர்கள்
கந்த வெங்கரி பரியிவை மடிவதுங் காணா
வந்தனன் னொருத் திரனென வெழுந்தனன் வழுதி. (௩௧)

மேவு வெஞ்சினத் தெழுந்தவன் வீரனை நோக்கி
நீவி ரஞ்சன்மின் சிதைப்பன்யா னீடுமப் படையைத்
தீதவர் மன்னவன் மணிமுடி சிதறிடு மெம்மு
னேவுர் நின்றுபோ ரிழைத்தன ரிழைத்தன னொன்று. (௩௨)

வில்லை வாங்கினா னிசைத்தன னெறிந்தனன் விசும்பு
மல்லன் ஞாலமுந் துணுக்குற வளவனீள் கரத்திற்
புல்லும் வார்சிலைக் கொருகணை முந்துறப்போக்கி
வில்லதானைமேற் செலுத்தின னலகில் வெவ்வாளி. (௩௩)

நீடு வெஞ்சரஞ் சென்றெதிர் நேரியன் படையி
லாடிடும்பரி மதக்கயம் வீரர்களங்கத்
தூடுபுக்குயிர் தேடியங்கோடிடு முயிர்ப்பி
ஞேடுமேற்றினி விடேமெனவும்பரி னளவும். (௬௪)

தலைமுறிந்தன மறவர்தோண் முறிந்தன தடக்கை
மலைமுறிந்தன பரிக்குலமுறிந்தன வடிவே
விலைமுறிந்தன தூரியமுறிந்தன வெடுத்த
சிலைமுறிந்தன முறிந்தன செம்பியன் சேனை. (௬௫)

சின்னநீள்பிணை மலைகள்புக் கொளித்தனர் சிலரோ
பன்னுபல்படை வனத்தினிற் பதுங்கினர் சிலரோ
முன்னரோடுதி ரத்திடை மூழ்கினர் சிலரோ
சென்னியோடுகால் சோர்ந்திட வோடினர் சிலரோ. (௬௬)

வாய்ந்த பொன்மதிற் கூடல்வாழ் வரகுணத் தென்னன்
சாய்ந்த தெவ்வர்மேற் படாந்திடான் றடங்கடற பிறந்த
காந்துநஞ்சமர் மிடற்றினன் றிருவருள் கருதி
வேய்ந்துவாகைபின ரூரந்தினன் மிகுபடையோடும். (௬௭)

துரத்தினன் விசும்புல வியசுர நதிப்புனலைக்
கரத்தினலெடுத தாமபலுண் வரைகளுங் கானுஞ்
சிரத்தினாமதி தரித்தவன றிகழ்பல பதியு
முரத்தினற்கடந் தெயதின னுபூர்புன றடு (௬௮)

திகழுந் நாட்டிலிட யிடைமரு தணிமையிற செலுங்காற்
ககனமுற்றெதிர் கதிரபொலி கவினமர் கனகச்
சிகரகோபுரங் கண்டனன் பேரினின றிழிந்து
மகிதலத்துறப பணிந்தனன மாற்றினன் விதிர்ப்பு. (௬௯)

நீடுகோபுர சிகரத்து நிலவுவெண் கொடிக
ளாடநோக்கிநங் குலத்தினி லவதரித் திட்டோன்
ஈடுவெம்பழி தொலைந்ததின் றீண்டெனக் குறித்து
நாடுதண் பிறை நடித்தலொத்திடு மென நயந்தான். (௭0)

மங்கலம் பொலி மாளிகைமண்டப மியாவும
பொங்குதண் சுடர்க்கனகமாய்ப் பொலிவினை நோக்கித்
தங்கு பொன்னுருக காகமீர்த்தத்தினுக் கென்று
ரெங்கும் பொனனுரு வங்கொலோ வெனத்தனி வியந்தான். (௭௧)

கஞ்சமேல்வளை யீன்றிடு கதிர்கொணித் திலத்தை
யஞ்சமென்பெடை முட்டையென் றடைகிடந் திடுநீர்

விஞ்சுவாவியும் வண்டுறை விரிமலர்ப் பொழிலு
மஞ்சுலாவிய புரிசையும் பார்த்துள மகிழ்ந்தான். (சஉ)

குல்வுதண்பொழில் கனிவளங் கொண்டுமுன் காட்ட
நிலவுதாமரையின் மாதரி னின்றெதிர் நடிப்ப
வலகில் பூவையுங் கிளிகளும் வருகென வழைப்பப்
புலவுவேலினன் கண்டுகேட்டின்புறஞ் போநதான். (சங)

மறைமுழக்கமு மங்கல முழக்கமு மாரு
மறுகினெய்தினன் வலங்கொடு சென்றுநாண் மலரின்
பொற்றுறைசுமந்திடு பொன்னியி னிலங்கெழிற பூசத்
துறைபடிந்து வேதியர்க்கிரு நிதிமழை சொரிந்தான் (சச)

சென்றுசத்திசன் னருட்புனல் படிந்தனன் செம்பொற்
குன்றமொத்தொளிர் குணதிசைக் கோபுரவாயி
லொன்றியுட் புகுந்தான் றொடர்கொடும் பழியொருபா
னின்றசந்தகன் விழிகெட நிற்பது போல. (சரு)

துன்னிலிவ்விடை மருதினெவ் வினைகளுந் தொலையு
மென்னயாவரு மறிந்திடற் கிலகொரு கரியா
யன்னவெம்பழி சோர்ந்துநின் றிடுதலு மாங்குப்
பன்னுவேந்துவன் றனை விடுபட்டவ னொத்தான். (சகா)

பின்னர் நோக்கினன் கண்டிலன் பழியினைப் பெரிதுந்
துன்னுமானந்தக் கடலிடை மூழ்கினன் சுருதி
யென்றும் வண்டுசூழ்ந் தொலித்திட மருதிடத்திருக்கு
மின்னுவார்சடைத தேனினைப்பருகினன் விழியால். (சஎ)

தொழுதெழுந்துள முருகிட விழிகணீர் துளும்பச்
செழுமலர்க் கரசரோருகஞ்சென்னி மேறகுவிய
முழுதுமாகிய கடவுட் னருளினை முன்னி
யெழுதுசித்திர மாமிஃதெனும்படி நின்றான். (சஅ)

பொன்னிசூழிடை மருதுறை பூரண புராண
முன்னமெய்திய பவங்களின் மொழியுமீண் டெய்தி
யுன்னடித்துணைத் தாமரை யொளிர்மலர் தாண்டற
கென்னபுண்ணியஞ் செய்தன னேழையே னம்ம. (சகூ)

வேறு.

ஒலிகடலெழுந்த நஞ்சை யொளிர்மிடற் றடக்கியாணோர்
குலமுதல் புரந்ததென்னக் கூற்றினை யுதைத்தோர்பால

னிலகிடக் காத்ததென்ன வேழையன் றனையுமின்னான்
வலியுறு பழிதீர்த்தாண்ட மருதநா யகனே போற்றி. (ருo)

அளவையென் றிசைப்பதாலு மரிமுதற் றேவராலுந்
தெளிவுற வுணரவொண்ணுச் சிவபரஞ் சுடரோதிங்கட்
பிளவுறு சடையாய் வேற்கட் பெருநல முலையாள் பாக
வளரிடை மருதின்மேவு மருதநாயகனே போற்றி. (ருக)

தொல்லைவன் பிறவியென்னுந் தொடுகடலிடையின் வீழ்வுற்
றல்லலி னழுந்துவேனை யருளெனுந் தோணிதன்னில்
வல்லைவந் தேற்றிகொண்டுன் மலரடித துணைகளென்னு
மல்லலொண கரையிறசேர்த்த மருதநாயகனேபோற்றி (ருஉ)

என்றெதிர் நின்றுபோற்று மிலங்கிலை வேலினனைக்
குன்றினை யுளைத்தோன் மன்று குணதிசை வாயிலின்பா
னின்றது பிரமகதைதி நீயநத நெறியினேகல்
சென்றிடு மேலைவாயிற் சிறந்திடு நெறியா லென்றான். (ருங)

விண்ணிலங் கிதனைக் கேளா மீனவன் மகிழ்ந்துமீண்டு
மண்ணுற வணங்கிப்போற்றி வலவயி னிமையச செல்வி
நண்ணுபூங் கோயிலெய்தி நளினமெல் லடியில் வீழ்ந்தா
னெண்ணுள முருகினன்மற றெழுந்திவை துதிசெய்வானால். (ருச)

வேறு.

தெரித்திடு மளவிலண் டங்களீன்று திகழ்பெருங்கருணை மென்சிறகா
விரித்தணைத் தவறன்றைக் காததினி திலங்கும் வியலுறு பனிவரைமயிலே
பரிதிடு மினியபொருட் பிரணவமாம பஞ்சரத்துறை பசுங்கிளியே
வரித்தட நெடுங்கட் பெருநலமுலையே வயங்குபெண்ணமுதமேபோற்றி

குருமணி விளக்கே யிசைதருவேதக் கொம்பரிற் படரிளங்கொடியே
வரமுறு பலன்மிக் குதவுமாகமதத்தே மாவிலவாழ்சிறு கருங்குயிலே
பரவிடு மிமையோர் மணிமுடி யுரிஞ்சு பதயுகத்தொரு சுவைக்கரும்பே
மருதிடத்திறையோன் மனத்தடத்துலவுமடப்பெடையன்னமேபோற்றி

போற்றியென் றினைய வகைபல துதித்துப் பூதநாயகனுறைப் படியே
மேற்றிசை வாயினெறிக் கொடுமறுகின் மேவினன் விளம்புமத் தலத்தே
வீற்றிருப் பதனுக் குளததின்மீதூரும் விருப்பினன் லுயர்நெடு மறுகின்
பாற்றனி வசதிசெய் தினிதிருந்தான பார்த்திபர் திறைகொணர்ந்துதவ.()

இன்னவ னிலங்கு மிடைமரு தணுகி யிகலுறு பழிதொலைத் துவகை
மன்னியாங் கிருக்கும் வகையுணர்ந்தார்த்தார்வனைந்திடுவரைப்புய வளவன்

றன்னுறு முதுவர்தமை விடுத்துற வுசாற்றிமுன் னிசைவுற வடைந்து
கன்னியைமணஞ்செய்திடக்கொடுத்திடலுங் களிப்புற வதுவைசெய்தன
னால். (ருஅ)

படிபுரந்திவ்வா றுங்கினிதிருக்கும் பஞ்சவனிலங் கெழின்மருதக்
கடவுளைத் தினமுஞ் சதுவலம் புரிந்து காலங்கடொறுமே பணிந்தேத்திக்
குடதிசை வாயிற் கோபுர மியற்றிக் கூடல்வா ழிறையவன் றனக்கு
வடதிசை வயிலோ ராலய மிழைத்து வணங்கிப்பி னரும்பணி செயுநாள

பாகுறு கங்குல் பகலிரு பொழுதும் பயின்றிடு தவத்தினால் மெலிந்தி
டாகமுன் னோக்கி மருதிறை யொருநா ளரசனுங் கிறைஞ்சிடு வேலை
வூகுறு குமுதவாய் மலர்ந்தீண்டு வாகுணு வருகென மகிழ்வுற்
றேகநாயகனே போற்றி யென்றிறைஞ்சி யிருகையுங் குவித்தெதிர் நின்
றான். (கூ0)

மருதிறையவனை நோக்கிநங் கயிலை மணிதிகழ் கொடுமுடி கடுக்கு
மொரு மதில் வகுத்து நமதுறைப்படி நீயொரு வலம்புரியி னுள்ளஃது
பரவுமா யிரநேரா மெனவுரைத்தான் பரவிழுறறவன் சிலபகலில்
விரவுமத்திறஞ்செய் திறைஞ்சினா னரனுமீனவ கொண்டுநா மென்றான். ()

வேந்தனித்திறமீங்கென்னையென்ஞான்றும்விமலநீபுரத்தியென்றிரந்தான்
பாந்தளம் பணியானத் திறம்புரக்கப் படுதியென் றிசைத்தனன் மகிழ்ந்து
தேந்துளித்திடு தண்கற்பகத் துணர்கள் சிந்தினர் தேவர்தங் கணங்கள்
வாய்ந்த பேருவகைக் கடலிடைததிளைதது மன்னவன் றுதிபல புரிநதான்

துட்டரு மொருகள் வளைச்சிரந் துணிப்பான் றுணைப்புயமிணைப் புறக்
கட்டிக்
கட்டுடனகர் காவலர்கொடுசெலுங் காற்கரிவடன்றிருவெணீறணியப்
பட்டிடுமிவனைய திறனறிந்தவனைப் பரிந்தழைத்தனைய கட்டவிழ்த்துச்
சிட்டர்போற்றிறையோனடியனீரொன்றுசிலநிதிகொடுததனன் விடுத்தான்.

ஓடிடு நரியினுளை கேட்டொளிரு முடிபதி தொடுமதில் சூழ்ந்த
கூடலங்கயற் கணுமையிடத் திறையைக் கூவினுவெனவெழுந்திரவிற்
றேடிமற்றவுற்றறைக் கொடுவர வுரைத்துத்தெரிக்குமன்னவற்றி றுக்கிலகு
மாடைகூறுடுத்து விடுத்தன னைமைத்த வடிமையாக் கொண்ட தென்ன
வர்கோன். (கூச)

குவளையும் பொலியுஞ்சலசமு நிறைந்த குளிர்புனற் றடத்தொரு பகலிற்
றவளைகளரற்று மோதை கேட்டிமஞ் சூழ்தடவரைத் தேற்றுவேற்
கண்ண
ளவளையோர் புறத்திலிருத்து மெங்கோனை யரகர வென்றுன வென்னத்
திவளைவின் மணியுங் கனகமும் வாரிச்சிந்தினுன் பைந்தமிழிறைவன்,கூரு.

வழிப்டு மொருவன் மஞ்சளத் குலரு மணிவிளை யெள்ளினை நுகர
விழிதனிற்கண்டு பிடித்திதே தென்ன வினவிமற் றவனிடை மருதின்
மழுவலான் றனக்கே யடிமையாய்ப்பின்னும்வ நதுதித்திடவெனப்புகலத்
தழுவிநின்றுளாய்ப் பிறந்திட றகெளியேன் றருகென்றேற்றவ னெச்சி
னுகர்ந்தான். (௬௬)

மறந்திகழ் சிறிய குலந்தனிற் பிறந்து மற்றொரு களவினால் வெட்டுண்
டிறந்தவன் றனதூன் றவிந்தவெண்டலையையிடைமருதெல்லையினோக்கி
யறந்திகழ் கரத்தா லெடுத்திழி விழிநீராட்டி யெனறலையு முன்றலை
போற்
சிறந்திடிப் பதியிற் கிடந்திடுங் கொல்லோ சிதைந்தொரு நாளெனப்
பகர்ந்தான். (௬௭)

பாலுறச் சிலர்கள் கருணையந்தடத்திற் படிந்துபோய் வலன்வரு போழ்தி
லாலயமுனறிற் கிடந்தநாய மலங்கண் டகற்றினோற் கிதனைநம் முலகி
னுவிலொன் றிரணடுமொருடு முழுதுநல்குவ மெனமுறை குறித்தாங்
கேலுநால்வலங் காறெடுத்திடக்காணு னெனது நாடெனக் கெனவெடுத்
தான். (௬௮)

தேம்பனுண் ணிடையா ரிசைததிடுமிசைகள் செல்பவர் தமையெலா நிறு
[த்து
மேம்படு மறுகின் வலன்வரு பொழுது வீழ்ந்தபொற் கனியுருக்கண்டு
பாம்பணி சடையோன் படிவமே முழுதும் பழுத்து நின்மன வெனப்ப
ணிந்து
வேம்பு கட்கெல்லாங் கதிருமிழ் மணிசூழ் விதானமேற சனமந்தனன்
மன்னோ (௬௯)

மற்றொரு தினத்துக் கங்குலிற் கணிதர் வகுத்தநல் லோரையினூர்த் தார்க்
கொற்றவனளிக்கவதுவைமுன புரிந்த சோமளப்பபுதுமலர்க்கொடியைச்
சிற்றிடை நெடுங்கட் சேடியர் செழியர் திருமக னினிதுவீற்றிருக்கும்
பொற்றிருமனையிலுய்த்துமீண்டனர் பூங்கொடி யெழில்சிறதெடுத்திசை
ப்பாம். (௭௦)

கெண்டையங் கணிகள் கூந்தலுக்குவமை கிளத்துதற் கியாதுளததுநீள்
கொண்டலின் குழையைக் காவினுலுழைத்துக் குலவிவண் டினத்தைநா
ணுறுத்தித்
தண்டருபஙச மலர்க்கடுக்கையினைச் சைவலத்தினை வனத்தகற்றி
யண்டிநள் ளிருளியா னிகரெனப் புலவோ ரல்லெனச் சொல்லிநின்றிடு
னே. (௭௧)

கனிதரு சுவையு மமிர்தமு நிகர்சொற் காரிகை யெழிற்றிரு வதனம்,
பனிமதி யொளியுந் தருப்பணத் தெளிவும் பங்கயப் புதுமலர்ச்சியுங்கொண்
டினிதுதான் முகத்தோன் கரத்திலன்றி யிலங்குபற்பல தினங் கருத்தாற்
றனியிருந் தமைத்தா னெனிலதற் குவமை சாற்றுதற் கெளிதினெய் திடு
மோ. (எக)

மின்னுருற் பகைடயோன் விரிசடைப்பிறையின் விளங்கெழிற்றிலத மொ
ன்றுளதே, லன்னவ ளுதலிற குவமைபாம்புருவ மதற்குநே ரணங்கிவள்
குனிக்கும், கன்னல்வெஞ் சிலையைக் கருதுமெம முள்ளங் கருதலிதினிய
தோபிறிதோ, விண்ணெழி ஞெகிக் கிணையிதிடா தன்றே வெள்ளலரான
தெண் மூலதோ. (எஉ)

கயலினிற் பிறழ்ந்து குவளையின் மலர்ந்து கடுவினிற் கறுத்துநீண் டரியுற்
றியமனைத் தரும னெனவுயிர் வாட்டி யிசைவரி களைச்சிறைப் படுத்தி
மயலுறுபிணையின் பார்வைகொண்டிலகு மடக்கொடி கூர்விழிக்குவமை
முயலுறு கணைவேல்வாளெனச்சிறிதுமொழிவதோ முன்னினும்பிழையே.

முத்தினத் தளவை வடிவினு லனறி மொழிநிறத் தாலுமொண் முறுவ
லொத்திடுந்தேனூறிதழினைத் துவரொன்றாக்கவவ் வுரையுமொவ்வாது
நத்தினைக்கமுகைக் கந்தரமுறமு நவில்வள் கந்தரமெனவே
யத்தகைச் சங்குங் கமுகும் வீற்றிருககு மவையித ரேதரமுறவே. (எ௩)

கனைகடற் பிறந்த வமிர்தனுள் வரிக்கட் கயல்பொருங்குழையெழிற்காது
தனையெதிர் நோக்கு மிளைஞரா வியைக்கத் தரித்திடு கருவியே யாகு
நனைமலர்ப் பகழி தொடுசிலைக் காளை நளினபங் கயமலர் பூத்துப்
புனையெழிற் றெளிநீர் நிறைவுபெற் றினிதாய்ப் பொலிதிடு வாவியேக
போலம். (எ௫)

மீனெனுந் தடங்கட் பிறைநுதற் றிருவின்மென்மொழிதனைக் கரும்பிரதந்
தேனுயர் கனிபா லமிர்தமென் றுரைப்பர் சிலர்சில ரிசைவெசவிக் கின்ப
மானதுற் றதுவுந் திறத்தவோ கலைப்பெ ணங்கையிற் பரித்திடு மியாழின்
கானமென் றுரைப்ப நாமினிவேறு கட்டுரைத் திடுவதெவ் வனம்ம. (எசு)

கனங்குழை மடந்தை யெழில்கனிந் தொழுகுங் கதிரிளந் தட்டுமுலை வரிவி
லனங்கனே மனம்வைத் திடுமணிச் செப்பு மவன்புனை மகுடமு நிகர்க்
கும், வனங்கொள் புற்புதந்தோற் றுடன்குலை வதுவும் வனசமென்முகை
யுடைந் திடலு, மினங்கிளி ரவையிற் றுளமென் றொடொன்றுற் றிகல்வ
து மிதினுரு விலைவே. (எஎ)

கோலமுற் றிலகு வயினுதற் குவமை குலவுமா லிலையெனச் சொல்லனவ்
வாலிலை யொருநீள் கருமயி ரொழுங்கு மடியிலோர் சுழியுமுற் றிலதா
வேதுமு பசுந்தோ ளிணையையுட் புனைகொள் வெதிரிநிகர்த் திடுங்கொல்

பைங்கன்ன, லேனுமென் றிடிஞெத் திடுமொரு வகைமற் றிருகையுங் காந்தளை யேய்க்கும். (எஅ)

வடிநெடுங் கண்ணி யிடைக்குநே ரொன்று வந்திடு நிமித்திரு லினனுந் துடியினம் பலர்பா லடிபடுமென்னுந் தோற்றமுன் ஞெளிக்குமெம் மனந் துங், கொடியிழை மதவே ளுடல்பணி மலர்ப்பூங் கொம்பிவை சிறப்பில செங்கைப், பிடியென லதுவோர் பிடிமடங் கலின்ப் பேசலா மறியமே லிரண்டும். (எகூ)

பங்கயப் பருமவல்குலுக் குவமை படிசுமர் திடுமராப் ...முஞ் செங்கதிர் மணிப்பொற் றேருமா மென்னத் தெரிக்கலாம் ... றிக்கிடப் பெறினு, மிங்கிவையிரண்டி னுயர்ந்துள தொன்றே யிலங்கவள்கயாளிவை நிகர்க்கு; மங்கணிந் திடுநீ டரம்பைக டலைகீழாகநின்றிடு மதிலையே. (அ0)

அன்னமென்னடைச் சிற்றிடைமலர்க்கோதை பணிமுழந்தாளினைநோக்கி ன்னது முழந்தா ளலவனென பவற்று ளியாதுகொ லெனவருட யம் பொன்னியந்துறையிற் பயில்சினை வராலும் புகன்றிடு மிவள்கனைகாலும் மன்னநு தினமும விரோதமுற்றெதிர்த்து மல்லிழைந் திடுநிகராகி. (அக)

மயிலின மெவையும் பிணிமுக மாகி வனையிடைத் திரிந்திட வவற்றி னியல் கவர்ந்திடுமின் சீரடித் தளிர்தன் னெழிலெலாங் கவர்ந்ததென் றன்னு; பயிலுறு வனசம் பங்கமுற் றினனும் பன்னுதன் றலைவனென் றிசைக்கும், வெயில்விரி பகலோன முகனெதிர் நோக்கி மென்கணீர் ததும்புநிற் பதுவே. (அ௨)

இன்னண மியம்பு மவயவ மெவையு மிலக்கணத் திசையெழில் கனியப் பொன்மணிச் சதங்கை சிலம்புமே கலைவிற் பொலிதொடி குழைநகிர்சுடிகை, வன்னவெண் டரள வடமுத லணிகள் வனைந்தவந் தவனியி னுலவோர் மின்னெனக கமலப் பொகுட்டில் வீற்றிருக்கு மெல்லிய லென்னமுன் னின்றாள். (அ௩)

கண்டன னரசன் கடலமு தனையாள் கச்சினைக்கிழித்தெழு தனமும் வண்டமர் விழியுங் கூந்தலுங் காமு மதிதனை மயக்கிடு முகமுந் தொண்டையங் கனியிற் சிறந்தசெவ் வாயுந் துலங்கிடு பிறவுறுப்பெழிலுங், கொண்ட னனிவண்மற் றிறையவன் றனக்கே கொடுத்திடத்தகுவளென் றெண்ணம். (அ௪)

வேறு.

அன்னநடைப்பெண் ணமுதை யுடனழைத்துக்கொண்டுபிறரறிந்திடாது சென்னிமதி தொடுமெழிற் றனமனையொடு வீதியுங்கடந்துசென்றுகோயின், மன்னுக்கடைத் தலைநின்று மருதநா யகவென்றான் வல்லை யாங்கே யென்னிறைவன் மணிக்கதவு திறந்துவா குணவருதி யென்றான்மன்னே.

வையையவள் நாடனெங்கள் மருதிறைவன் முன்னணுகி வணங்கி நின்
றாங், கையவுனக் கிவடகுமென் றுளத்தினிடைக் குறித்திட்டே னடியே
னிங்ஙு, ஞய்யும் வகை கொண்டருணீ யின்றேன்மற் றுய்யேனென் றுரை
த்தானேனோர்முன், கையொழிந்த வுருவனைத்துந் தனதுருவிற் கரந்திட்டான்
கருணை மூர்த்தி. (அசு)

அத்திறமீ னவமூக்கி யிஃதெனியேன் றேட்டதென வகற்றி விட்ட
கைத்தலங்கொ லென்றனன்கண் ணுதலீதுவு முனதன்புங்காலைப்போதின்
முத்தமிழோ யுலகறியக் கோடுமென்று னவுன்மகிழ்ந்து முன்றி லுற்றான்
மொய்த்தமணிக் கதவமெலாங்கடிதுகாப்பாயின வான்மூன்புபோல. (அஎ)

மாதினையு மன்னனையுங் கண்டிலராய் மனைக்கணுற்றோர் மருண்டு தேடிக்
காதியில்வே லிறையைவந்து கண்டுதனித்தேவியெங்குங் காணோமென்றார்
சோதியிடத்தின னென்று னிதுவெனகொ லெனவவர்க டுணுங்கி நின்று
ரோதிமெய் போதுபுலர் போதாகப் பூசிப்பானுரியோர் சூழ்ந்தார். (அஅ)

அன்னவர்பொற் கதவுதிறந் துள்புகுந்தா ரரசனைச்சூழந் தவருமகத
மன்னவன்ற னுடனபுகுந்தா ரியாருமிறை யோன்முடிமேன் மலர்க்கை
கண்டார், பன்னுபுரா னங்கதனைக் கரந்திட்டான் மகிழ்ந்திட்டான் பார்த்து
வேந்தன், முன்னுபிறர் விதிர்ப்புமிறும் பூதுமுற்றார் மலர்மாரி சொரிந்தார்
விணோர். (அகூ)

இந்துபுனை வேணியனைப் பணிந்தரச னினிப்பணியா தெனக்கீண்
டென்றான், சந்தமலர்ப பொழில்புடைசூழ் மதுரைதனக் கேகிடினீ கடிதி
றங்குத், தந்திடுது நமபதமென் றுரைத்திட்டான் மருதிறைவன் றனக்கவ்
வேலை; செந்தமிழின் றொடை புனைந்து தென்னன்விடை கொண்டுபுறஞ்
சென்றானன்றே. (கூ0)

கனகமணிக் குலநெருங்கு கவிகைநிழன் மிசைநெருங்கக் கனிநதகாட்சி
மனமதனிற் புகழ்மருத வாணன்மலர்ப் பதநெருங்க வாக்கிலோங்கு
புனிதனிசைத் திருநாம நெருங்கவிழி முன்னவுன்றன் பொருவில்கோல
மினிதுநெருங்கிடச்சேனை புடைநெருங்க மதுரைநக ரெய்தினனால். கூக

பொங்குமகிழ் வுடனாங்கு வைகிடுநாளாகமநீள் புராணமியாவுந்
திங்கள்முடிப்பரன்மகிழுஞ் சிவபுரியின் பெருமையுரை செய்யக்கேட்டுத்
தங்குமதைக் காண்பதற்குப் பெருவிருப்புக் கொண்டுதனிச் சீருமீசன்
கங்குலினிற் றிருக்கோயி லடைந்துமையாள் மணாளனைமுன் கண்டுதொழ்
ந்து. (கூஉ)

மண்டுபுக ழன்பருட னுயர்சிவ லோகத்திடைநீ வைகுங்காட்சி [றான்
கண்டுபணிந் திடற்கெளியேன் மனத்தினிடை யுதித்ததொரு காதலென்

வண்டவள மதிச்சடையோன் மகிழ்ந்தனையவுலகுபுவி வருவானெண்ணங் கொண்டனன்மற் றதுகோடி மதிச்சுடரி னெடுபுவியிற் குதித்ததாங்கே.()

அவ்வுலகி னெழிலுநெடு மாண்முதலா னவர்பதமு மதனிலன்பாற் செவ்விதினெம் பிரானருள்பெற் றிருப்பவர்கள் சிறப்புமுயர் தேவர்போ ற்று, நவ்வியங்கைப்பரமனுறை கோலமுமன் னனருளா னந்திகாட்ட வெவ்வினைத்திண் கடல்கடந்தான் கண்டுபணிந் தானுந்த வெள்ளத்தாழ்ந் தான். (௯௪)

முன்னிறைஞ்சி நின்றிடுங்காற் சிவலோக மதனையதாய் முன்புபோல் மின்னிடமா துடனிறையோன் வீற்றிருப்பக் கண்டுமனி வியந்து வாழ் த்திப், பின்னரும்பல் பகலசெங்கோல் செலுத்தியுல காண்டிருந்து பின்பு மற்றைத், தென்னுல்வு சிவபுரியுற் றரனுருவா யினிதிருந்தான றேவர்போ ற்ற. (௯௫)

வாதனச்சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்.

# பிரதக்கிணமகிமைச் சருக்கம்.

சாந்த மாகிய வேலிசூழ்ந் திடத்தவப் பயினா
வாய்ந்த சீருற வளர்த்திடு மாமுனி விர்காள்
காந்த மோதிய தோதின மீங்கிது காறு
மேந்து நம்புக ழிலிங்கமோ துவதினி யிசைப்பாம். (௧)

வேறு.

கருதத் திருவிடை மருதென் றிடும்காக் கண்வாழ் வுறுநுதற்கண்ணன் மருதக் கடவுளை யிமையோர் முதலினர் மலர்சே ரிணையடி பணிவுற்று வருதக் கணமவை தமின்முன் மதிவினுண் மருவுற் றிடுதலுச் சுவமேதப் பிரதக் கிணமென வெவரும் புகழுறு பெயரிற் பொலிவுறு மினிதம்ம. (௨)

அதினுற் றிசைவலம் வருவோர் பெறுவர்க ளணிநீ டிலகிடுமுயர் செல்வம் மதிநன் குறுவர்கண் மகவுற் றிடுவர்கள் மருவார்தமைவென் றிடுவார்கள் சதிர்பெற் றிடுவர்கள் பிணியற்றிடுவர்கள் சகமெச் சுறுவர்க ளிவையன்றிப் பதமொன் றவணுறு மதனுக் கியல்பெறு பரிமேதப்பல னடைவார்கள். (௩)

மகரா லயம்வளை தருமிப் புவிதனை வலம்வந் திடினுறு வதுமெய்தும் புகழ்வா ரணிமுக விறைசே லவன்மறை புகல்வோ ரருமதி முனமெய்தி மிகுமா தரவொடு செய்வெய் திடுபயன விரைவெய் திடுவெங் கொலை யாதி, யிகழ்பா தகவினை யவர்செய் தனவுள யாவுந் தெருமா லுடனேகும்.

வருநா னொருமண் டலமனை மண்டல மருவொரு காண்மண் டலமெனிலை பொருநா விருபதின் மேலா றிருதொகை யோரோ மெனுமூன் றினுமொன் று, கருதா வவரவர் வன்மைக் கிசைதரு கணிதம் பெறவந் திடல்வேண் டிடு, ஒருவா றதில்வல னுற்றோர் களவந் துழிவந் துழியிறை யிற்பா மால். (ரு)

கையா மிணைமலர் குவியா மனமொடு கருணைத் திருமுக மலர்வெய்த மெய்யா லொருவலஞ் செய்வா ரதனிடை வினைநீத் துளமெண் ணியவெ ய்திப், பையா டரவணி யெம்மா னுறைதரு பதியுற் றுறைவர்கண் மகிழ் வோடு, தையா மதியினில் விழவிற் புரிதரு தகையோர் பெறுபலன் புகல் வார்யார். (சு)

வேறு.

இத்த கைத்தனிப்ப தக்கிணைத் துள்ளுற விமையோர்
சித்தர் சாரணா ருரகர்கந் தருவர்பா ரிடங்கள்
சுத்த மாதவர் முதலினோர் சூழ்ந்துவெண் கயிலை
யொத்தி லங்கிடுங் கொடுமுடிப் பதக்கிண மொன்று. (எ)

தெரித ருங்கலின் மருவுமற் றதைவலஞ் செய்வோர்
விரித ரும்பிணி வறுமைவெம் பவங்களும் வெருளுற்
றிரித ரும்பொருள் புகழொடு மசவுநன் கெய்தும்
புரித ருந்தனி யறிவுறும் பொலிவுறும் வாணாள். (அ)

கயிலை மால்வரை தனைவலங் கனிந்திடன் போடு
செயிலி லணைந்திடு பயனெவை யவையெலாஞ் சேரு
மியலி தென்னவே யுதவிடு மிசைபல னிதற்குட்
பயில வுற்றிடும் புகழுறு பதக்கிணம் பலவும். (கூ)

இறைவன் முன்னரட் டாங்கமைங் காற்பணிந் தேத்தித்
துறையி னீடுமத் துதியொடு துணைக்கைமார் பணைத்து
† மறைமு தற்பத மனத்துற மெல்லென வருதன்
முறைமை யாமுறு வலமென மொழியுமா கமமும். (கய)

அன்னதன்மையி னோங்கிடு மணிவலஞ் செய்து
மன்னுறுந்துயர் தீர்ந்தின்ப மருவலுற் றவர்க
ளின்ன ரின்னரொன் றியல்புற வெடுத்துமக்கினிது
பன்னு துஞ்சிலர் தமைப்பரன் பதமுறு மன்த்தீர். (கக)

பிரதக்கிணமகிமைச்சருக்கம்

முற்றும்.

---

† மறைமுதற்பதம்—பிரணவம்.

உ

சிவமயம்.

# யுவனாசுவச் சருக்கம்

அறங் குலாவிய மனுதிரு னயோத்திமா நகரான்
மறங் குலாவிய பகைஞர்ப்பான் மடங்கலே றனையா
னிறங் குலாவுசெங் கதிர்வழி நிருபன்மற் றொருவன்
பிறங்கு கீர்த்தியான் புகல்யுவ னாசுவப் பெயரான்.

மைந்த னின்மையான் வருந்துறு வசிட்டனை யணுகி
யெந்தை யேயினி யெந்தநாண் மகவெனக் கெய்துஞ்
சுந்த ரக்கனி வாய்மலாந் தருள்கெனத் தொழுதா
னந்த மாதவ னிசைகுதும வருந்தலென் றறையும்.

வெண்ண கைத்துவ ரிதழ்மனை மெல்லிய லுடனே
புண்ணி யம்பொலி யிடைமரு தெனும்பதி புகுந்தாங்
கெண்ணு றுந்தனி மகப்பெறு மகமினி தியற்றிற்
கண்ணு தற்பிரா னருள்செயுங் கடிதினே கென்றான்.

[illegible]ாயி ருங்கதிர் வேலினான் கருத்துள மகிழாத்
தூய மாதவ நீயுமவந் தருள்கெனத் துதிசெய
தேயு மன்னவன் றன்றொடு மில்லவ ளுடனும்
பாய சேனையி னுடனுமுற் றெழுந்தனன் படாந்தான்.

படரும் போதினி லெதிர்ப்படு பரனுயர் பதியுந்
தடமி குநதிடு நதிகளுந் தபோதன ருறையு
மிடனு மொண்புகழ்ச் சயிலமு மிலங்கமன் னவற்குத
திடனு றுந்தவ வசிட்டனு முனிவரன் றெரிக்கும்.

தன்னி டத்திறந் திடுமுயிர் தனைவடு கேசன்
மன்னு சூலமையைத் துயர்த்தி வழங்கிடுந் தலனீ
தின்ன ருந்தவம புரிபகீ ரதனுளத துவகை
துன்ன மேலையிப் புவிவரு துறையிது காண்டி.

இயமன் றன்னுட னுதித்ததா மிந்நதி சிலந்தி
யுயருங் காளனோ டத்திநின் றருச்சனை யுஞற்றுஞ்
செயலி னாற்பெயர் பெற்றதிச் சயிலமச் சிலம்பு
பயிலு மாதவக் கழுகினாற் படிததிடும் பெயர்த்தால்.

மூந்து சத்திசெய் பூசையை முடித்திட வெள்ளம்
வந்த வாறிஃ தஃதெழின் மாநிழ லிடத்து

நந்தி லில்லதோ ரமைமவள் புரிந்துறை நகர
மந்த நீனவளை யுரியய னுற்றன்மாற் றியதால். (அ)

இவ்வணி லஙகுதல் பாதிரி மேற்புலி யிலைகூட
நவமி சைப்பகர் நீதமார் நகரியி னெதிர்ந்த
குவளை வாள்விழிக் காளிதன் மதிமுகங் குனியத்
தவர்கள் போற்றிடத் தனிமுத னடித்தநதித் தலனே. (௯)

தொக்க வேலையின் டொடர்ந்திடத் தோணியாய் மிதந்த
மிக்க சீருறு புரமிது வெவ்வினை தொலைக்கு
முக்கனாட திகழ் பதியது மொழியுமை மயிலாய்த்
தக்க தண்புன லாடிய தளிர்த்துறை யிவ்வூர். (௧௦)

அன்ன தாங்கணை மரலிறை யடியடைந் திடுமு
ன்ன நாளொருவ னுரியிறைக் கீந்தவூ ரிவ்வூர்
சொன்ன வாறுணா பரடபொரு பிலங்குமோ தோன்று
முன்ன சாலயத தரசிருந் தரசுசெய் மூதூர். (௧௧)

என்ன வோதுறு பலபுகழும் பிறவுமாங் கிசைத்திட்
டன்ன வற்றிசை தலங்களுற் றரும்புன லாடிப்
பன்ன கம்புனை பரமனைப் பணிந்தவர் படர்ந்து
பொன்னி நீடுபூ சத்துறை படிந்தனர் பொருந்தி. (௧௨)

மீத லந்துறு மதிலிடை விளைவினிற் படருஞ்
சீத வண்முகின் மோதுறீத் திகைத்துநின் றலறு
மோதை கேளுறு தோஙகிய வொலிமறைத் திலங்கும்
பூத லம்புகழ் திடைமரு தெனும்பதி புகுந்தார். (௧௩)

புகுந்தி ளாரொடு மன்னவன புகழ்மரு திடத்தி
னுகந்த சோதியை வணங்கினு னுயர்மறு கிடத்து
மிகுந்த பொற்புறோர் வசதியுற றுறைந்தனன் வேதம்
பகர்ந்த வாமக வேள்வியாங் கிழைத்தனன் பரிந்து. (௧௪)

அன்ன வேள்வியி லனையவன் மனைவட் கருத்த
மன்னு புத்திர நிமித்தமா வைத்தபொற் கும்பந்
தின்னி லுற்றிடு புனலினைத் தாகமேற் கொள்ள
வுன்னு மோரிரா வெடுத்தனன் குடித்தன னுற்று. (௧௫)

நீங்கி டாலமுங் குடித்திடச் செய்திடுந் தாக
நீங்க லுற்றதென் செய்தன மெனத்தனி நின்று
ரேங்கி டுங்கரு வயிற்றினி லுற்றதப் பொழுதே
பாங்கி லுற்றளோ ருணர்ந்திது பருவர லடைந்தார். (௧௬)

உதித்தி டும்பதம் வரிற்கரு வொருகண மாங்கு
வதிக்கு மோவிசை வயிற்றினைக் கிழித்துமுன் வந்து
குதித்த னன்றனிக் காதலன் குவலய மீது
விதிர்ப்பு மின்னலு மடைந்துகீழ் விழுந்தனன் வேந்தன். (கஎ)

கருத்த ழிந்துகீழ் விழுந்திடுங் காவலன் றனது
வருத்த மாறிடக் கிழிபடு வயிற்றினை யினிது
பொருத்தி மற்றதின் மருவுறு புண்ணினை யுலர்த்த
மருத்தி னங்கண்மேற் குவித்தனர் விரிதருதிடு மதியோர். (கஅ)

ஆய செய்கையி லனையபுண் ணுறிடா தோங்கத்
தூய மாதவ முனிவர்கள் சோதியா லயத்தின்
மேய வான்பரி மகவல மேவிநீ யியற்றிற்
காயு மேலிதை யுலர்த்திடக் காணுய வே றென்றார். (கக)

வெற்றி வேந்தனுங் கவரொடு மெல்லெனச் சென்று
மற்றை யோர்வலம் வந்தனன் வருமுனம் வயிற்றி
லுற்ற புண்ணுலர்ந் துயர்திரி வினைகளு முலர்ந்த
கற்ற ளோர்களை யிகழ்ந்துறை கயவர்தந் திருவின். (உ0)

பின்னு மூவிரு பதக்கிணம் போந்தனன் பெரிதுந்
தன்னு ளங்கொளா மகிழ்வொடுந் தவளமால் விடையோன்
பொன்ன டித்துணை பணிந்தனன் புவிமுதற பொருள்க
ளன்ன வற்குமவே தியர்கருமாங் களித்தன னநேகம். (உக)

அந்த நீண்மனை யெய்தின னருமருந் தனைய
மைந்தன் வாண்முக நோக்கினன் மகிழ்ந்துபொன் வருடஞ்
சிந்தி னனதி விருந்தனன் சிலபகல் பின்னர்
வந்து ளோரொடு மகனொடு மருவினன் றன்னூர். (உஉ)

சந்த தம்புக விடைமரு திறையவன் றாள்கள்
சிந்தை யுற்றிட விருந்துபின் பலபகல் செலுத்தி
யந்த மார்சிவ புரியிடைந் தானவன் புதல்வன்
வந்து வெம்பழி போக்கியவாறினி வகுப்பாம். (உரு)

புஷ்பதுவசருக்க முற்றும்.



சிவமயம்

# மாந்தாதாச்சருக்கம்



வெயிலவ னிகரு மேனி விறல்யுவ னாசுவன்றன்
வயினிடை யிருந்து வந்த மைந்தன்மாந் தாதா வென்னு
மியலுறு நாம மெய்தி யெழிலினின் மதனை வென்று
பயிலுறு கல்வி தன்னிற் பாரபரிப் பவனை வென்றான். (௧)

திடமதின் மேரு வென்னுந் தெய்வ தவரையை வென்று
கொடையினிற் சலதி முற்றுங் குடித்தெழு முகிலை வென்று
வடிதரு நெடிய வேலின் மருவலர் தம்மை வென்று
சுடர்மணி மகுடஞ் சூடித் தொன்னிலம் புரக்கு நாளின். (௨)

திறல்கெழு கலிங்க வேந்தன் றிறையெதி ருதவா னாக
மறமலி சேனை யானை வாமபரி நெடுந்தே ரொன்ன
நிறைதரு வேலை தன்னி னின்றெழு தூளி தன்னை
லறைகதிர் மறையச் சென்றாங் கவனொடு மடுபோர் செய்தான். (௩)

நவிலுறு மவரு மோங்கு நால்வகைச் சேனை யோடு
முவகையோ டெதிர்த்து வெம்போ ருடன்றுசில் பகல்பின் னோர்நா
ளவிலுமுற் றனிகத் தோடு மோடினா னதனை நோக்கி
யிலனையான் றீரர்த்து மாறீண் டியல்பல வென்று மீண்டான். (௪)

அன்னவன் சேனை வீர ரடர்ந்துசெல் கலிங்க நாடன
றன்னைமுன் வளைந்து நீடு சமர்செய்தார் தானை யோடு
பன்னிடு படையு மிநதப் பாரிடை நிற்க வஞ்சிக்
கொன்னுறு கணிச்சிச் செங்கைக் கூற்றினார் புகுந்தொளித்தான். (௫)

வன்படை வீர மா[illegible]தி மலைவினில் விதிர்ப்பு மேவி
வெங்கொடுந் தவரைக் கொன்ற வெம்பழி மாந்தா தாவைத்
துன்புறச் சூழ்ந்த தன்னா னெழுதிசை வசிட்டன் றன்னை
யன்பொடு நின்றா னன்னா னஞ்சலென் றிதனைக் கூறும். (௬)

பொருதிரைக் கடல்சூழ் வையம் போற்றிடு மன்னர் மன்ன
கருதலன் றனைநின் சேனை கலக்கநீ மருவு பாவஞ்
சுருதிசூழ் மருதா ரொய்தித் துதிபெறு புரவி மேதத்
தொருவலம் வருமு னம்ம வொருவலங் கனையு மன்றே. (௭)

மருத்தன் னீழன் மேவு வரதனைப் பணிந்து போற்றிக்
கருதிடு பணிக ளாற்றிக் கலந்திடு விசாக நாளிற்
றிருவுறு விழாவுஞ் செய்து திகழவ னருள்பெற் றீண்டு
வருதலிப் பொழுதே செல்க மருவிறு தானை யோடும். (அ)

என்றெதி ருரைத்தான் வேந்த னினிதென மகிழ்ச்சி யெய்தித்
தன்றிருஞ் சேனை சூழத் தலத்திடை மருதி னெய்திக்
குன்றவில் லிறைவற் போற்றிக் குலவொரு வலிஞ்செய் முன்னர்ச்
சென்றன தீமை யாவுந் தீயுறு பஞ்சி யென்ன. (கூ)

ஆங்கதை யுணர்வுற் றெய்து மகமகிழ் வோடு பின்னும்
பாங்குறச் சூழ்ந்துள ளேகிய பரமனைப் பணிந்து முற்று
மீங்கெனைக் காத்தல் வேண்டு மிதநிற மென்ன வேத்தி
யோங்கிடு மறுகி னெய்தி யுறைந்தனன் மதி யொன்றில். (க0)

பற்றிடு சேனை யோரும் பகுத்திடு மிடங்க டமதி
லுற்றனர் பின்ன ரெண்ணி லுயர்வியை நிலனுங் காசும்
பொற்றிருப் பணியு மீந்து புகன்றிடு மண்டபாதி
கற்றிருப் பணியுஞ் செய்தான் காவலனுதிக காங்கே. (கக)

திருப்பணி பலவுஞ் செய்து திகழ்விழா வினிது செய்வான்
விருப்புறு மனத்தி னோடு மேவினன மேவுங் காலை
யருப்பிள முலைமென் மாத ரடுபடைக் கனனல் விற்கை
மருப்பயில் கணையா னோடும் வந்தது வசந்த காலம். (கஉ)

சலதியி னமுது நஞ்சுந் தனித்தனி யன்றே வந்த
மலையவெற் புதவு மந்த மருத்தொன்றே மனைநிட் டோர்கட்
கலகிலின் பமிர்த மாகித் தணந்தவர்க் கடனஞ் சாகி
யிலகிடு மினையோர் வைகு மிடந்துரீஇ யெழுந்த தன்றே. (கங)

மறுவறு கலைக ளாய்ந்தோர் மடனெனத் தருக்க ளியாவு
முறுபழுப் பிலைகள் போக்கி யோதவ ருணர்வு மானக்
குறைவுறத் தளிர்த்தன் னோர்தங் குணமதின்மெல் லரும்பு தோற்றி
நிறைபுக ழென்ன வெங்கு மலர்ந்தன நிறைபூஞ் சோலை. (கச)

பத்திர முதவு பொன்னிப் புதுப்புனல் பரய்ந்து காவுஞ்
சித்திரத் தடமுந் தேமா முதலிய பூந்த செய்கை
சத்திர மதிகொண் டோனுக் கவன்பரி கூனக ளன்றோ
னத்திரங் களையுங் கங்கே யமர்செயற் கிட்ட லொக்கும். (கரு)

வந்திடு வசந்தஞ் சோலைத் தருவொடு வல்லி கட்கு
மந்தளிர்ப் புதிய தூசு புனைந்திரும் பணிகள் பூட்டி

முந்துற வழகு செய்து முகமலர் வித்துக் கிள்ளை
மந்திர மிசைய நீடு மன்றல்செய் வித்த தம்ம. (கரு)

அன்னதண் பொழில்செய் மன்றல் காண்பதற் கணைவா ரொன்னி
மன்னூறு தானை வீரர் வளவனீள் சேனை வீரர்
மின்னிடை மகளிர் சில்லோர் வியன்பொழிற் போது கொய்து
நன்னர்நீ ராடல் செய்ய நயந்தன ரொழுந்து செல்வார். (கஎ)

சிலரொழிற் றுரங்கம் யானை தேர்மிசை யேக லுற்றார்
நலனுறு சிவிகை மீது நண்ணினர் சிலர்கள் சில்லோர்
பலனுடை யனைய்த வேதம் பதிகளாய் நடந்தார் நீடு
சலனுறக் குழுவிற் சில்லோர் தனித்தனி சில்லோர் சென்றார். (கஅ)

காரிகை யொருத்தி கண்ணோர் காளையுற் றெவரு மியானை
தேரொடு சிவிகை மீது செல்கின்றா ரியானுஞ் சோலை
சேருதற் கொருதே ரோனுந் திகழுறக் களிற தேனு
மாரிவ னுதவ வல்லா ரவனுட னேகவென்றாள். (ககூ)

சுந்தர மகளிர் சில்லோர் தொடர்பி னோர் விடலை யெய்திப்
பைந்தொடி யவர்கட் கெட்டாப் பனிமலர் பறித்து நல்கி
முந்தவர் பணியு மாற்ற முன்னியிங் கெழுந்தே னந்த
நந்தன மறியேன் சற்றே காட்டுமி னல்லீ ரென்றான். (உ0)

வல்லவ னொருவ னங்கோர் மடந்தைமுன் னனைது நெஞ்ச
மல்லுறன் கூந்த லுற்ற தென்றனன் விழ்த்தாள் கூந்தல்
வல்லுறுந் தனத்த தென்றான் வனைதுகில் சிறிது நீத்தாள்
புல்லிய தல்கு லென்றாள் போவென நடந்திட் டாளால். (உக)

அன்னமென் னடையோர் பாவை யணிந்திடு துகிலி னூடு
வன்முலை சிறிது தோன்ற நோக்கியோர் மைந்தன் மாலாய்
மன்னவ ணிருகி னின்று செலிற்செல்வன் மற்று நோக்கான்
பின்னுற வருவோர் தள்ள விழுந்திடப் பெரிது நொந்தான். (உஉ)

சீதள முறு பூஞ்சோலை சேர்ந்தன ரசோகு முல்லை
தாதகி மயிலை சூதஞ் சாதிமந் தாரங் கோங்கு
பாதிரி செருந்தி புன்னை மல்லிகை பன்னி வெட்சி
மாதவி யாதி பூத்து நெருங்கிய வளமை கண்டார். (உ௩)

நீடின வேற்க ணல்லார் நேர்தலுஞ் சோலை தன்னு
ளாடின மயில்க ளீட்டி மகன்றன வெகின மெல்ல
வாடின மழையுண் போகின் மகிழ்ந்தன குயில்க ளோடு
பாடின கிளிகள் பூவை பதுங்கின குடம்பை யுற்றே. (உச)

தேமொழி யொருத்தி யங்கோர் செண்பக மலரைக் கொய்து
நாசிமுன் னீட்டி மோப்ப நவிலுறு காளை நோக்கி
வாசநீ டவைகள் நேரோ மற்றிதை நிகர்பா ரொன்றோ
ராசிலீ கோங்க ரும்பைக ளொய்து நீட்டின னனுக வந்தே. (உரு)

ஊடலுற் றவள்பின் காத லுயர்தலு மொருத்தி கேள்வன்
மாடுற நிற்ற லோக்கி நோக்குறா தவள்போல் வாவி
நீடொறு மலர்ப்பூங் கொம்பை நேருறப் பறறி யீர்த்திட
டாடவ னொளிவிவ் வேலை யறவளைத் திடுவ னென்றாள். (உசா)

விடையனை யொருவன் கொய்யு மென்மலர்க் கோட்டின் மீது
படிதருங் கொம்பின் மென்பூப் பறிக்கவோர் பாவை பின்வந்
திடையுறு துகின்மேற் கால்வைத் தேறிநீ தன்றோண்மே னின்றாள்
கொடிகளோர் கொழுகொம் பேறிக் குலவிமேற் பிடித்தல் போலும். (உஎ)

ஒருவிடன் றோளின் மேனின் றொருத்திபூப் பறிக்க வோர்மா
துரியவ னொளையுஞ் சற்றே பரியென வுறுகின னாவ்
வரிவைமுன் குதித்துச் சென்றா ளவனுறு நருஞ்சு கன்றாள் பின்னுற
திருவரு மிவர்மி னென்றாங் கின்னலின ழுந்தி நின்றான். (உஅ)

சுடர்த்தொடி மகளி ரில்லோர் வளைத்திடோர் துணர்ப்பூங் கொம்பைப்
பிடித்தலு மொருத்தி மற்றோர் பெயர்ந்தனர் நிமிர்ந்தி டந்தக்
கடித்தடஞ் சினையை யன்னாள் கையிடா தஞ்சி நின்றா
ளடுத்தவள் கணவன் கண்ணுற் றணைக்கெனக் கருதிச் சென்றான். (உகூ)

உரமிசை யென்கொல் சொற்க முயரற மியற்றி னோர்கள்
பரிவிற் சேரிடமே யோங்கு பயோதர மின்ப மாரி
தருவதே தனமிங் கேழைத தனியிள னேற்கு தவலாமென்
றொருவிற லோனும வாட்க ளொருத்தியு மிசைத்து நின்றார். (௩0)

மற்பொலி தொடிக்கை நீயார் மகளொவன் மனை மனை
னற்புறு மனையிற் றுண்மை யடியனேன் மனையானே யாஞ்
சொற்பயி லனைகுநானும் மனையென்றோர் சுடர்வே லோனுங்
கற்புறு மாதும் பேசிக் கலக்கமுற் றனையன் சென்றான். (௩க)

வன்மதக் களிறன் னானோர் வயவனோர் வனிதை முன் போய்த்
தன்மை முன்னிலைப் பேரியார்க்குத் தகுமலர் துரைக்க வேண்டு
மென்ன மற்றவ ளனக்கு முனக்கு மீங்கிசையு மென்றா
ளன்னவன் போதுமீ தென்றகத் திடையுவகை பூத்தான். (௩உ)

அருத்தி யோடொரி யாடன் றோளினி றறைந்தவளை யங்கோர்
திருத்தகு விறலோன் கூவத் தெரிக்குமப் பெயராண் மற்றோர்

முருத்தன மூரலாளுங் கேள்வி யின் முன் னுற்று
ளொருத்தி நாணொடுநின்றா ளொருத்திவெஞ் சினமேற்கொண்டாள்.

வெற்றிவேற் றடக்கை யாளோர் வீரனோர் கரிய வாட்கண்
முற்றிழை சென்னி மீதோர் முல்லைமென் மலரைக் கொய்தாங்
குற்றிட வெறிய வன்று ணுயர்களைச் சிலையெங் கென்றாள்
பற்றதி னிசைநாண் மற்றுண் ணெனப் பறந்த தென்றான். (௩௪)

மெல்லி யன்மக ளிராயமவிரவொரு மடந்தை கொங்கை
புல்லுதற் கலகில் காதல் பூண்டவ னொருவ னங்கு
வில்வமென் கனியி னென்று தொடுதலு நோக்கி மேவு
மல்லிகை முகையி னென்று மலரொன்று கொய்து நின்றாள். (௩௫)

விரும்பின னொருத்தி சேனோர் விறலினன் விழியை மூடக்
கரும்பெறு மொழியோர் பாவை கண்டுகண் சிவந்து நின்று
வரும்புறக் கேள்வன் முகனுற் றென்னென மவிநா ணுற்றுச்
சுரும்பு கணைலரின் மூழ்கித் தூற்றிய துகளை யென்றாள். (௩௬)

தென்னுறு சோலை யெங்குந் திரிந்தொரு மடந்தை நீடு
நன்னா மாதவித் தண்ணிழ லணுகலு மொருவ னெய்திப்
பன்னி மென்மலர்க ளீண்டுப் பறித்தளித திடவோ வென்று
னன்ன வளியான் வணமுல்லை யலர்கொள் ளொனடந்தி டென்றாள். (௩௭)

சிறரிக் கயற்கணொளோர சேயிழை மலர்கள் கொய்தாள்
வீறுசெந் நிறநதண் போதினொன் றுதன் மென்கைக் கொண்டாங்
கேதனை கொழுநன் முனனை யெய்தலு மொருமின் னன்னாள்
வேறொரு வனிதையின்றே வென்றனள் வெள்கி நின்றாள். (௩௮)

இத்திற மயிலன் னாரு மிளைஞரு மினிதி னீண்டிக்
கொத்துறு முகையும போதுங் கொய்தனர் புனைந்தும் மோந்து
மொத்திட வொருவ ராகத் தொருவர்க ளெறிந்தும் முன்னர்த்
துய்த்தக மகிழ்ச்சி யுற்றார் தொகுமலர்க் காவி னின்பம். (௩௯)

மற்றரு மிவ ரிவ்வாறு மருவலர் தம்மை யெல்லாம்
பற்றி முன் பிணைத்துக் கட்டிக் கொண்டு பின்பகரு நன்னூல்
கற்றிலர் மனம்போல் வைகுங் காவுறு வறுமை நோக்கி
யுற்றனர் குளனுமியாறு மொண் புனலாடல் செய்வான். (௪0)

வேறு.

வந்தியா வருந்துடு மெனக் குதித்தலும் வனசீ
ருந்திடுந் துளிவிசும் பெழல் விசும்பினுக் கோடைக்

கந்தரஞ் சொரிவியப்ப தூஉம் வீழ்ந்திடல் கார்நின்
றந்தரத்திடை மழை சொரி வியப்பதூஉ மாகும் (௬௧)

செய்ய சுண்ணமுந் தேய்வையுஞ் செறிந்திடு மொருவர்
மெய்யினுற்றிட வொருவர் முன் வீசியும் விளங்கு
மைகயினுற்றிடு சிவிறி நீர் கனமெனச் சொரிந்துந்
தூய்ய நீர்க் குடைந்தும் விளையாடுவார் சூழ்ந்து. (௬௨)

வேறு.

அன்ன மென்னடைப் பூங்கோதை யரிவைய ரினியதூநீர்
முன்னுற விருப்பின் மூழ்கி மூழ்கியங் கெழுதலோத்திற்
றுன்னுறு கருங்கொண்மூவிற் சுடர்விரித் தினிது காட்டு
மின்னினந் தோன்றி யாழ்ந்து மீளவுந் தோன்றல் போலும். (௬௩)

சிலைமத னனையனங் கோர்திற லினனொரு பூங்கோதை
முலைமிசைப் புனலைச் செங்கைமுகந்துகந் திறைத்தானீடு
கொலைமதத டக்கைவேழங் குளித்திட வமைத்தபாக
னலைபுனல் வாரிவாரி யதன்மிசை யிறைத்தல்போலும். (௬௪)

தாக்கணங் கனையளோர்மான் குளித்திடத் தன்பி னெய்தித்
தூக்கிடு மலர்மென் கூந்தற் சொருக்கினை யவிழ்த்தோர் காளை
தேக்குறு புனலின் மூழ்கிச் சேணிடை யெழுந்தம்மாது
நோக்கியங் கயலோர்ச் சிற நோக்கிமுன் னகைதந நின்றான். (௬௫)

களித்தவ ளொருத்தி யோர்பாற் கலந்திடு மூடலோடு
குளித்திட வவடன் கேள்வன் குளிர்புன லிடைச்சேண்மூழ்கி
யொளித்தவந் தெழிற்றாள் பற்றி யுளனுற வீர்ப்பக்கண்ணீர்
துளித்திட வலறி முன்னர்த் தேறலை றிடத திகைத்து நின்றாள். (௬௬)

ஆழ்ந்திடு புனலினங்கோர் வலவனோ ரரிவை பின்னர்த்
தாழ்ந்தவ ளினியகால் கடன்கழுத் திடைத்தாளொன்னைச்
சூழ்ந்திட நிமிர்வுற் றந்தத்துடியிடை சிற்றநோக்கி
வீழ்ந்திட வெறிந்துநீரில வீழுமுன் றடக்கையேற்றான். (௬௭)

பொற்றொடி யொருத்தி தெண்ணீர் புகுந்தொளித் திடுவனோவந்
தற்றெனப் பிடித்தியென்ன வுயர்வரை யனையதோளான்
மற்றனைக் குழாத்துட் காண்பான் வளைக்கைபற் றிடுவனென்றாங்
கற்புடன் பற்றிமூழ்கி யாண்மகன பிடித்தே னென்றான். (௬௮)

விழிகொடு வேலைவென்ற மெல்லிய லொருத்தி கஞ்சத்
தெழிலுறு மரும்பொன்றாழத் திருத்தல்கண் டிதைக்கொய் கென்ன
வழிதரு மதவேளன்ன னொருமக னதுகொண்டெய்தி
மொழியுமிவ்வரும்பினோடு மூன்றெனக் கரத்தி லீந்தான். (௬௯)

நிறமுறு புனலி னின்று நீடெழில் வாவியூடு
நறைவிரி மலர்கொய்வாரு ணவிலொரு திறலோனங்கோர்
மறமலி வேற்கணுடன் வனமுலை தொடலுநோக்கி
யறனிதோ வென்றான் கஞ்சத் தரும்பெனத் தொட்டேனென்றான். (௫௰)

சமரவேற் கண்ணினாளோர் தையல்வண் புனல்வாய்க் கொண்டாங்
குமிழ்தலு மதனைநேருற் றொருவன்றன்வாயேற்றுண்டா
னமிர்தமொ வனையதென்று மொருவனங் கதனுக்கன்னான்
குமுதமென் மலரின் றீந்தேன் கைக்குமோ குடித்தாலென்றான். (௫௧)

மங்கைமற் றொருத்தியல்கால் மூழ்கலு முரியோன்வாரி
தங்குசெவ் வல்லிப்போது தனிலொன்று கைக்கொண்டிந்தப்
பங்கய மலர்நின் கண்போற் பருத்ததைப் பார்த்திடென்று
னங்கவ ளனைய தெண்ணீ ரகன்றனை யேறினாளால். (௫௨)

சேலன கருங்கண் சேப்பச் செய்யவாய் விளர்ப்பக்கூந்தல்
பாலுற வவிழ்ந்துலாவ நிற்குமோர் பாவைதன்னை
மாலனை வடன்காந்தன் வடிவிதென் னெனவோர் தைய
லேலநீர் தோய்ந்திட்டான்மற றெவ்வனை மிருப்பதென்ன. (௫௩)

ஓதுறு புலவியாளோ ரொண்ணுதல் புனைமெல்லாடை
சீதநீர் நனைந்துமேனி தெரிதலு மனுளறகூவி
வாதனிந்தந்தி டென்றான் மனமிரங் கியதோவென்று
னுதமென் பட்டென்றான் பின்னனு மென்னினனீ தென்றான் (௫௪)

கண்ணுறு மிவரிவ்வாறு நாடியிவ் வொருவராக
வண்ணணீள் கரையிலேறி மறுதுகில் புனைந்து சாந்துந்
தண்ணுறு மலர்ப்பூந்தாருந் தழைகதிர்க் கலனுந்தாங்கி
யுண்மகிழ் வெய்தித்தேறு லுண்பதற் கொருப்பட்டாரால். (௫௫)

கன்னிகை யொருத்தி யீரத் துகிலனோர் காதலோனை
மன்னனீ கலையென்றானீ மான்கோலென் றெடுத்தீந் திட்டான்
றன்னவள் கலைவையென்று டுகில்புனைந் தனையே யென்று
னன்னவள் க...ீ யென்று ளனையனீ நல்லனென்றான். (௫௬)

கஞ்சனவானில் வில்லுங் கணையும் போகமு முன்கொண்டு
மஞ்சினஞ் சூழத் தோன்று மதயெழி னோக்கிச்சேடி
வஞ்சியர் பளிங்கிற்பொன்னின் வகுத்திடு வள்ளந்தன்னில்
விஞ்சுதேன் வாக்கிநல்க மென்கனி வாய்வைத்துண்டார். (௫௭)

மின்னிடை யொருத்தியுண்டு மிகுந்திடு நறவுட்டோன்றுந
தன்னெழிற் றனத்தை யிந்தச் சலசமென் மூகைப்பூவாத

தென்னென வொருத்தி யெய்தி யிருவர்த முகமுநோக்கி
யின்னவை மலருங்கொல்லோ விருமதி முனனமொன்றாள். (௫௮)

தேறன்மிக் கருந்தி றளோர் தெரிவைகஞ் சனத்தினூடு
கூறுதன் படிவநோக்கிக் கோற்றொடி யெனைப்போலென்னல்
காறுநன் கிருந்தா யின்று கண்முகம வாய்மற்றெல்லா
மாறுபட் டிருந்தி யென்னே யீது நுசர்ந் தனையோவென்றாள். (௫௯)

குடித்தவ ளொருத்தி வேரிக் குழிசியின் மதியை நோக்கிப்
படித்திழுன் னனையின்றீண்டு பதுங்கிடில் விடுவனேனென்
றெடுத்தலைத் திடக்கையிட்டாள் காண்கிலள் திர்வரனோக்கி
விடுத்தனிக் குழிசியென்ன வெகுண்டுதைத் துடைத்திட்டாளால். (௬௦)

நீடியமைய லாளோர் நேரிழை தனது சாயை
யாடியுண் ணக்கியானிங் கென்செய்தே னலகக ணெய்த
வீடுறு மிதனிலென்னை யடைதந்தவ ரியார்சொலென்றாள்
கூடிமற் றவளை நீங்காக் கொழுநன்பார்த் தெனையுமென்றான். (௬௧)

மட்டளை விளாதுகொண்டு மாதவ மியநறுமேலோர்
நிட்டையி லிருப்பதென்ன விருந்தன ணிகமோர் தையல்
கட்டிபூங் கோதையோர்மின் கணவனுந்தாளும் வைகு
மிட்டமுஞ் சினமுமற்று மெடுத்தெடுத் திசைத்தாண மன்னே. (௬௨)

வரிகளோச் சிட்டேவோடாது வள்ளமொய்த் திடலுமுணணு
மரிவையங் கொருத்தி யின்ன தளிகட்கோ வெனக்கோ வென்னப்
பரிவுறு சேடி யுண்மின் பருகதிரு வீருமென்று
ளிருதிறத் தவர்க்கும் வேண்டா வென்றெடுத் துகுத்துநக்காள். (௬௩)

ஒருமக ளூடித்தன்பி னின்றிடு முரிய ளொன்றுங்
கருகுறு மொருத்திக் கீதை யருந்தெனத் தானுண்டெஞ்சு
முருகினை நீட்டவாத மொய்குழல் கணவன்சீற
விருவரு மின்னுறோர்க ளிருவருஞ் சமரி னின்றார். (௬௪)

ஆரமு தனையதீம்பா லடிசிலுந் தயிரவிரய
மூரலு மிழுதின் சோறு மூவகைக் கனியுந்தூய
நீருநீ டருந்துவார்க ணிகழுமியா ழிசைப பார்மற்றை
யோர்தரு மிசைமுன் சேரவொருவர் மேலொருவர் வீழ்வார் (௬௫)

வின்னுத லொருத்தி சூத மென்கனி யருந்தென் றீயத்
தன்னுரி யவனீள் கொவ்வைத் தண்கனி தருகென் றானோர்
மின்னிடை யிளநீர் மன்னவேண்டுங்கொ லெனவோர் வில்லோ
னென்னதினிருக்கும் பாலோ வின்சுவைப் புனலோ வென்றான். (௬௬)

பன்னிடு மிருதோராமிற் படிந்திடு வசந்தமென்ப
துன்னிடு மதுவென்ருேர் பேருற்றவந் துவந்தெவர்க்குமின்ப
மிந்நிலத் தெய்துவிக்கு மென்றிடி லினையகாலத்
தன்னதை யருந்தினோர்கள் களிப்பினுக்களவுண்டாமோ. (௬௭)

மருவுமிவ் வேனிறன்னின் மாதவ மெய்தலோர்ந்து
நிருபனு மகிழ்ச்சியெய்தி நீணிலு வேந்தரியாரும்
வருகென முடங்கல் போக்கி யவர்கடம் வரவுநோக்கித்
திருவுறு நகரமெங்குஞ் சிறப்புமேற் சிறப்புசெய்து. (௬அ)

புகல்விடைக் கொடிமுன்னேற்றிப் பொருந்துமீ ரைந்துநாளுந்
திகழுறு மூர்திமீதுந் தேரினும் பவனிபோந்து
தகவுறு தீர்த்த நல்கித் தனிமுதல் மருதவாண
னகமகிழ் வெய்தச்செய்து சொரிந்தன னம்பொன்மாரி. (௬௯)

விரவுறு மிறுநாள் வேந்தன் விளங்குபொற் கோயிலெய்தி
யரனெதிர் பணியுங்காலை யரசநின் பவங்களியாவு
மொருவின நீயுன்னூருற் றுலகையாண் டிருபன்றன்பின்
பரபத மெய்துகென்னப் பகர்ந்தன னரன்விண் வாக்கால். (எ0)

அம்மொழி செவியினெய்த வகங்களி கூர்ந்துமன்னன்
கைமதவரைத்தோல் போர்த்த கடவுட னருளையெண்ணிச்
செம்மைமகீ டன்பிற்போற்றி விடைகொடு சேனையோடும்
வெம்முரணுற்றுங்காவல் வியனகர யோத்தியுற்ருன். (எக)

பொலங்குவ டனைய திண்டோட் புகலுறு மாந்தாதாமுன்
கலிங்கநாட் டிறையைக்கொன்ற கடுமபழி தொலைதசெம்மீச
னிலங்கருள் பெற்ற வாறீ தினியெழில் வசுமானெய்தி
வலங்கொடு தனதுநாடு மருவிய காதைசொல்வாம். (எ௨)

மாந்தாதாச் சருக்கம் முற்றும்.

---

உ

சிவமயம்.

## வசுமன்னவச்சருக்கம்.

திரைமான மில்வலேயுஞ் செழுந்துகிரு மெறிகடல்சூழ்
தரைமானொண் முகநிகருந் தண்பொழில்சூழ் கச்சியினு
ளுரைமாணி கருமினைய வுலகுபுரந் தருளுவதில்
வரைமானும் புயமுடையான் வசுமானென் றொருவேந்தன். (க)

## வேறு.

திருவளர் காசிக்கேகித் திகழ்கயாச் சிராத்தஞ்செய்யுக்
கருதியங்குற் றனந்தக் காரியமுடித்துத் தன்னூர்
மருவிமுன் மிருவுலார்கள் வழிகொடு மருவியநதப்
பெருநகர் தனைக்கொண் டோர்கள் பெட்பொடு காலநோக்கி. (௨)

அத்திறம் வருபோன்கேளா வஞ்சாமணி யிழந்தாங்கொங்கி,
நித்திய ஞானானந்த நிருமலற குரியைப்புற
முத்தனை யுயர்சாபாலி முனிவனை யடைந்துபோற்றிக்
கைத்தனி மலரிரண்டுங் கலந்தொரு முகையாச்செய்து. (௩)

ஆதிதன் பொருள்கொண்டேனே வந்தணர் பொருள்கொண்டேனே
மாதவர் பொருளகொண்டேனே வலிமையி னேழையோர்க
ளேதமுற் றிடச்செய்தேனே யெனதெழி லைகருநாம்
பேதுறு தெய்வ மொய்திக் கலந்ததென் பெரியோ யென்றான். (௪)

முற்பிறப் பிடைநீ செல்வ முதிர்ந்தவன் புகல்டல் பண்டம்
விற்பவன் வணிக னுன்றன் விளங்கெழில் மனையின் பாங்கர்ப்
பொற்புறு மனையி னுன்னோர் பூசுர ருளுநின்பாற்
சொற்பெறு தணடுலாதி வேண்டுவ தொடர்ந்துகொள்வான். (௫)

கொண்டவை திங்கட் கோர்காற் கூட்டியங் கவற்றிற்கெண்ணிற்
கண்டிடு பொருளமற்றீவான் கணக்கினி லிதறீட்டி
மண்டிய வரவுதீட்டா திருந்தனை வருடமைமபான்
விண்டிடு வனசததாபான விளிந்தனன் காலமெய்தி. (௬)

அன்னவன் மனையும் வீர்தா ளவற்குநா லைந்துமைந்தர்
பன்னிடு மிளமை யுற்றோர் பறறிநீ யவர்கடம்மை
மன்னவ னவையின் முன்னர் வரவிலாக் கணக்குக்காட்டித்
துன்னிடு மவர்வீடாதி தொகுபொரு ளியாவுங்கொண்டாய். (௭)

ஆதலா னினதி நாட்டைக் கீவர்ந்தனரமரா ரிந்நா
ளோதுசில் பொருள்கள் முன்னி யொளிர்மதிச் சுடையிறைக்குங்
கோதில் சிரடியார் கட்குங் கொடுத்தனை யதனுலிந்தப்
பூதலங் காவலசெய்தாய் புரவலனாகத்தோன்றி. (௮)

புரவிநன் மகழிப்பொது புரிந்தனை யாயினுன்றன்
றிருநகரொய்துமென்னச் செப்பினன் முனிவன் வேந்தன்
றெரிதரு புடவியின்றி நிதியின்றிச் செய்வதெவ்வா
றிருநிதி யுளதே லியார்க்கு மெண்ணிய முடியுமென்றான். (௯)

பொருவில்சீர் முனிவன் வாவி புண்டரீ கமலப்போது
மரிவையர் முகமும் வேருங் கறிவுறு தழலுஞ்செல்வத்
திருவிடை மருதினெய்தித் திகழ்பரி மகதகதின்பேறு
தருவலம் வரினுன் வையஞ் சார்ந்திடு மின்றே யென்றான். (௧௦)

வேந்தன்மிக் குவகையெய்தி விடைகொடு நடத்தின்வாளை
பாய்ந்துசெவ் வினீர் சிந்தும் பகரிடை மருதினைமேவித்
தோய்ந்துதண் பொன்னியீசன் றுணையடி பணிந்துபோற்றி
வாய்ந்திட வலனுங்குற்றான் மனத்திறும் வலனுற்றால். (௧௧)

அவ்விடை மருதின்கண்ணே தானிருந் தமைச்சர் தம்மைத்
தெவ்வர்மேல் விடுத்தானன்னோர் சென்றவர் தமைப்போர் தன்னில்
வெவ்வழற் படையால் வென்று மேவுதன் றேயன்றிக்
கவ்வைசெய் தவர்தநாடுமே பற்றினர் கடிதுவந்தார். (௧௨)

குரிசிலுண் மகிழ்ந் தமைச்சர் கொண்டிடு செவ்வர்நாட்டை
வருசிலை மேருவாக்கு மருதவாணனுக்கு நல்கித்
துரிசறு தனுவிற்செங்கை தொடர்விழா நடாத்திப்பின்னர்
முரசதிர் நானைசூழ முதுநகர்க்காஞ்சிபுற்றான் (௧௩)

சத்திமு னிவ்வூரெனத் தவம்புரி காஞ்சிவேந்த
னித்தனி வலஞ்செய் தீச னருளுந்தன் னெழில்கொணடுஞ்
சித்தமின் புறக்கொண்டெய்து திறனிஃது றநதைமன்னன்
மித்திரற் கொன்றபாவம் விலக்கியகதைமேற்சொல்வாம். (௧௪)

வசுமன்னவச் சருக்கம் முற்றும்.

உ

சிவமயம்.

# அஞ்சத்துவசச்சருக்கம்

நஞ்சத்துணைவேல் விழிமடவார் நயந்துமட நீட்டெழில் வடிவான்
கஞ்சத்துவளை முத்தளிக்குங் கழனித் தென் காவிரிநாடன
வெஞ்சத் துருக்கட் கரியனையான் மிருகல்வியினு ளொருவளவ
னஞ்சத்துவச னெனும்பெய ரானன்று ளுறையூ ருறையூராம். (௧)

வனைபொற் கழலான் வன்றனக்கு மறையோனொருவன் மித்திரன்மற்
றனையோன் பெபருமிதத்திர நயாகு மரசன் கலைகளினற்
கனைவெண்டிரை நீர்க்கங்கையின்மான்மியமோர்ந்தொருநாட்கண்போன்று
தனையா தரவினுற் பிரியாமறையோன் றன்னோடிதுகூறும் (௨)

